# பிள்ளை லோகாசார்யர் வைபவம்.

வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்தவர் பிள்ளை லோகாசார்யர்; இளையவர் அழகியமணவாளப் பெருமாள் நாயனார். இவ்விருவரும் நைஷ்டிகப்ரஹ்மசாரிகள். ஐப்பசியில் திருவோணத்தன்று அவதரித்த பரமகாருணிகரான பிள்ளைலோகாசார்யருடைய பெருமையைச் சிறிது பேசி மகிழ்வோம். இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானப் பெருமைகள் ஒரு புறமிருக்க, பரமகருணையின் திறத்தை என்னென்று பகர்வது?

ஆசாரியர்கள் பொதுவாக இருவகைப்படுவார்கள். அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யரென்றும் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்றும். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களாவார்கள். சிஷ்யப்ரார்த்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கையின்னருளால் தாமாகக் கனிந்து "பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப்பணி கொள்வதையே விரதமாகக் கொண்டு தம்பேறாக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் தாம் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவர். ஆயினும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச்செய்திலர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களையருளிச் செய்தவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறுநூலாவது அருளிச்செய்திருக்கலாம். இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது, மணவாள மாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச் செய்யவேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தமையாலே, ஸ்ரீராமாநுஜரான அந்த அவதாரத்தினிலே ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தாமே சென்றனர். ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலிய திவ்யக்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப் பட்டேயிருந்தாலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தாராத குறை குறையே. அக்குறைதீரவே ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான பிள்ளை லோகாசாரியர் திருவவதரித்து, இவர் தாமே முதன் முதலாக ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரஞ் செய்தருளினர்.

லோகாசார்யனென்கிற திருநாமம் முதலில் நம்பிள்ளைக்கு வழங்கிவந்தது. ஸ்வாசார்யர் திருநாமத்தையே புதல்வர்க்கு இடவேணுமென்று விருப்பங்கொண்ட இவரது திருத்தந்தையார் நம்பிள்ளையின் திருநாமத்தையே இவர்க்குச் சாத்தினர். வாசி தெரிவதற்காகப் பிள்ளை லோகாசார்யரென்று வழங்குதல் நிகழ்ந்தது. உபதேச ரத்தினமாலையில்—"பின்னை வடக்குத் திருவீதிப்பிள்ளை, அன்பாலன்ன திருநாமத்தை யாதரித்து, மன்னுபுகழ் மைந்தருக்குச் சாத்து கையால் வந்துபரந்ததெங்கும், இந்தத் திருநாமமிங்கு" என்றுள்ள பாசுரத்தினால் இஃதறியத்தக்கது. உண்மையில் லோகாசார்யரென்னும் திருநாமம் இவர்க்கே தகும்.

இவ்விருள் தருமாஞாலத்தின் அகவிருளை அறவே யொழிக்கவல்ல திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் செய்யும் கன்னலுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வமும் பரமகாருணிகத்வமும் பரமப்ராமாணிகத்வமும் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பராப்ராப்தமான அர்த்தங்களையே அற்புதமாக அமைத்திருக்குமது இவருடைய திவ்யக்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாயிருக்கும்.

இவரருளிச் செய்த நூல்கள் அஷ்டாதசரஹஸ்யமென்று ப்ரஸித்தமாயிருக்கும். அவற்றுள் ஸ்ரீவசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்னும் மூன்று க்ரந்தங்கள் ஸூத்ர ஸரணியில் திருவவதரித்தவை. இவற்றினுள்ளும் ஸ்ரீவசன பூஷணத்தின் பெருமை அப்ர

மேயமென்று மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் ஏழு பாசுரங்களினால் மிக மிகக் கொண்டாடியருளுகிறார். "ஸர்வஜ்ஞ லோககுருநிர்மிதமார்யபோக்யம் ...ர்தே ஸதா வசநபூஷண திவ்யசாஸ்த்ரம்" என்று இந்த திவ்யக்ரந்தத்தை ஒரு திவ்யசாஸ்திரமென்றே வழங்குவர் பெரியார். இதற்கு மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்யானத்தின் அவதாரிகையிலுள்ள சில ஸ்ரீஸூக்திகளை இங்கெடுத்துக்காட்ட வேண்டியது அவச்யமாகிறது,— "ஸம்ஸாரி சேதநரிழவு ஸஹிக்கமாட்டாத பரமக்ருபையாலே தத்வஜ்ஞாநார்த்தமாகத்தாமும் பலப்ரபந்தங்களருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர், ஆசார்ய பரம்பராப்ராப்தங்களான அர்த்தங்களில், அவர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக உபதேசித்துப் போந்தவையாய், அருமைபெருமைகளைப்பற்ற இதற்கு முன்புதாமும் ப்ரகாசிப்பியாமல் அடக்கிக்கொண்டு போந்தவையான அர்த்த விசேஷங்களெல்லாவற்றையும் பின்புள்ளாருமிழக்க வொண்ணாதென்கிற தம்முடைய க்ருபாதிசயத்துக்கு மேலே பெருமாளும் ஸ்வப்நத்திலே திருவுள்ளமாயருளுகையாலே ஸ்ரீவசநபூஷணமாகிய இப்ப்ரபந்தமுகேந வெளியிட்டருளுகிறார். முன்பே பேரருளாளப் பெருமாள் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையாலே மணல்பாக்கத்திலேயிருப்பாரொரு நம்பியாரை விசேஷகடாக்ஷம் பண்ணியருளி தஞ்சமாயிருப்பன சில அர்த்த விசேஷங்களைத் தாமே அவர்க்கு ஸ்வப்நமுகேந அருளிச்செய்து 'நீர் போய் இரண்டாற்றுக்கு நடுவே வர்த்தியும்; இன்னமுமக்கு இவ்வர்த்தங்களை யெல்லாம் விசதமாக நாம் அங்கே சொல்லுகிறோம்' என்று திருவுள்ளமாயருளுகையாலே அவரிங்கே வந்து (பெரிய) பெருமாளை ஸேவித்துக் கொண்டு, தமக்கு முன்பு அங்கருளிச் செய்த அர்த்தங்களையும் அசலறியாதபடி அநுஸந்தித்துக் கொண்டு ஏகாந்தமானதொரு கோயிலிலே வர்த்தியாநிற்கச் செய்தே, தம்முடைய ஸ்ரீபாதத்துக்கு அந்தரங்கரான முதலிகளும் தாமுமாக பிள்ளை ஒரு நாள் அந்தக் கோயிலிலே யாத்ருச்சிகமாக வெழுந்தருளி, அவ்விடம் ஏகாந்தமாயிருக்கையாலே ரஹஸ்யார்த்தங்களை அவர்களுக்கருளிச் செய்து கொண்டு எழுந்தருளியிரா நிற்க, அவை தமக்குப் பேரருளாளப் பெருமாளருளிச் செய்த அர்த்த விசேஷங்களாயிருக்கையாலே அவர் போர வித்தராய் உள்ளில் நின்றும் புறப்பட்டு வந்து பிள்ளை ஸ்ரீபாதத்திலே விழுந்து 'அவரோ நீர்?' என்ன, 'ஆவதேது?' என்று பிள்ளை கேட்டருள, பேரருளாளப் பெருமாள் தமக்கு இவ்வர்த்தங்களை ப்ரஸாதித்தருளின படியையும் இத்தேசத்திலே போக விட்டருளின படியையும் இன்னும் உமக்கங்கே விசதமாகச் சொல்லுகிறோமென்றருளிச் செய்தபடியையும் விண்ணப்பஞ் செய்ய, கேட்டு மிகவும் ஹ்ருஷ்டராய் அவரையும் அபிமானித்தருள, அவரும் அங்குத்தைக்கு அந்தரங்கராய் வர்த்திக்கிற நாளிலே, பெருமாள் அவர்க்கு ஸ்வப்நத்திலே 'இவ்வர்த்தங்கள் மறைந்து போகாதபடி இவற்றை யொருப்ரபந்தரூபமாக்கச் சொன்னோமென்று நீர் பிள்ளைக்குச் சொல்லும்' என்று திருவுள்ளமாக, அவர் 'இப்படி பெருமாள் திருவுள்ள மாயருளினார்' என்று விண்ணப்பஞ் செய்ய, 'ஆனால் அப்படி செய்வோம்' என்று திருவுள்ளம் பற்றி அனந்தரம் இப்ப்ரபந்தமிட்டருளினா ரென்று ப்ரஸித்தமிறே." என்பவை வியாக்யான ஸூக்திகள்.

மணவாள மாமுனிகள் ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கம் பெரிய கோயிலுக்கெழுந்தருளின போது அங்கே பிள்ளை லோகாசார்ய ரெழுந்தருளியிருந்த விடத்திற்கு நித்தியமெழுந்தருளி "ரஹஸ்யம் விளைந்த மண்" என்று அவ்விடத்தே போர ப்ரதிபத்தி பண்ணி உகந்திருப்பர் என்று ப்ரஸித்தம்.

பிள்ளை லோகாசார்யர் வைபவம் முற்றிற்று.

---

# வேதாந்த தேசிகர் வைபவம்.

இவ்வாசிரியர் திருவவதரித்தவிடம் "காசிமுதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனி யருளாளர் கச்சிக்கு ஒவ்வா" என்றும் "முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சி" என்றும் இவர்தம்மாலே புகழப்பட்ட காஞ்சீக்ஷேத்ரத்தில் திருத்தண்கா என வழங்கப்பெறும் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியின் பரிஸரமாகிய 'தூப்புல்' என்னும் திவ்யஸ்தலம். தூப்புல் என்பது பரிசுத்தமான புல் என்றபடி. தர்ப்பத்தைச் சொன்னவாறு. வைதிகர்கள் தர்ப்பத்தை விச்வாமித்ரமென்று வழங்குவர்களாதலால், விச்வாமித்ர கோத்ரத்தவர்களான மஹரிஷிகள் வாழ்ந்து வந்த இடம் என்பதுபற்றி அந்நிலம் தூப்புல் என வழங்கப்பட்டு வந்ததெனப் பெரியோர் பகர்வர். தூப்பில் என்பதும் பொருந்தும்; தூப்பு இல்—தூய்மை வாய்ந்த இடம்.

இவர்க்குத் திருத்தகப்பனார் அனந்த ஸோமயாஜிகள். திருத்தாயார் தோதாரம்பி யம்மை. ஆசிரியர் (மாதுலரான) கிடாம்பி அப்புள்ளார். இராமானுஜப் பிள்ளான் என்பவரும் அவரே.

திருவேங்கடமுடையானுடைய திருமணியே இவ்வாசிரியராய்த் தோன்றினதாகப் பல ப்ரமாணங்களினால் விளங்குகின்றது. ஸ்வாமிதாமே ஸங்கல்பஸூர்யோதய நாடக ப்ரஸ்தாவனையில் தம்மைப்பற்றி அருளிச்செய்யுமிடத்து "விக்ராவிநீ விபுதவைரிவரூதிநோசம் பத்மாஸநே பரிசாரிதேன ப்ரயுக்தா, உத்ப்ரேக்ஷ்யதே புதஜனைருபபத்தி பூம்நா கண்டா ஹரேஸ்ஸமஜநிஷ்ட யதாத்மநேதி" என்றருளிய ச்லோகமும், இவரது திருக்குமாரர் பணித்த தேசிகமங்களத்தில் "வேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம்சோதவா பவேத், யதீந்த்ராம்சோதவேத்யேவம் விதர்க்யாயாஸ்து மங்களம்" என்றுள்ள ச்லோகமும் முக்கியமாக இங்கு அநுஸந்திக்கவுரியன.

இவ்வாசிரியர் திருவேங்கடமுடையானுடைய ப்ரஹ்மோத்ஸவத்தின் அவப்ருத தினமாகிய புரட்டாசித்திருவோணத்தன்று திருவவதரித்தமைபற்றி ஸ்ரீவேங்கடநாத சர்மா என்று திருநாமம் சாத்தப்பெற்றார். வேதாந்தாசார்யர் என்கிற திருநாமம் பிறகு பட்டப்பெயராகக் கிடைத்ததிவர்க்கு. [கலி ௵ 4370, சாலிவாஹநசக௵ 1191, கி. பி. 1268—விபவஸம்வத்ஸரத்தில் இவரது திருவவதாரமென்று பெரியார் நிரூபிக்கின்றனர்.] நூறு ஸம்வத்ஸரம் இவ்விபூதியில் எழுந்தருளியிருந்து திருநாட்டுக் கெழுந்தருளினராதலால் இற்றைக்கு ஏறக்குறைய 582 ஆண்டுகட்குமுன் இவ்வாசிரியரது ஜீவிதகாலம் என விளங்காநின்றது.

இவ்வாசிரியர் தமது மாதுலராகிய அப்புள்ளாருடைய அதிமாத்ர ப்ரீதிக்குப் பாத்ரபூதராயிருந்துவந்தார். நடாதூரம்மாள் ஸந்நிதியில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் செய்துகொண்டிருந்த அவ்வாசிரியர், நாலைந்து பிராயமுள்ள இவ்வாசிரியக் குழந்தையையும் உடனழைத்துக்கொண்டு காலக்ஷேப கோஷ்டிக்குச் செல்ல, அம்மாள் இக்குழந்தையின் தேஜோவிசேஷத்தையும் ப்ரதிபாப்ரபாவத்தையும் நோக்கிவியந்து "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷ கடாக்ஷம் செய்தருளினர். இவ்விஷயம் இவ்வாசிரியர் தம்மாலேயே அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் "ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்த்ருஷ்டேந ஸர்வம்ஸஹநிசிததியா வேங்கடேசேந" என்று பணிக்கப்பட்டது.

உரிய காலங்களில் சௌளோபநயநாதி ஸகலஸம்ஸ்காரங்களும் அடைவே செய்யப்பெற்ற இவர் வேதங்களை ஓதத் தொடங்கினர். வேதமோதின திறமையைப்பற்றிப் பூருவர்கள் கூறியுள்ள வொருச்லோகம் மிக அற்புதமானது. "அஹ்நாய வேதாநகிலாந் ஆசார்யாதக்ரஹீத்

நலேஸ, புநருச்சாரணுகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம்* என்பதாம். வேதத்தில் வேஷ்டா பதங்கள் என்று சிலவுண்டு. [ப்ரஜாபதிரிதிப்ரஜா—பதி:, பாகதேயேநேதிபாக—தேயேந ; அக்நிஷ்டோமஸாம மித்யக்நிஷ்டோம—ஸாமம்] என்பவைபோன்ற பதங்கள் வேஷ்டாபதங்களாகும். அவை இரட்டித் திரட்டிக்கே ஓதவேண்டியவையாதலால், அத்தகைய வேஷ்டாபதங்களில் மாத்திரம் ஸ்வாமிக்குப் புநருச்சாரணம் ப்ராப்தமாயிற்றே யல்லது மற்றைப்படியுள்ள பதங்களை யெல்லாம் ஸக்ருதுச்சாரண மாத்ரத்திலேயே க்ரஹித்தருளினரென்று இவருடைய அதிசயஸாதாரணமான க்ரஹணதாரண படுத்வம் கூறியவாறு. இவ்வண்ணமாகவே வேதாங்கமாகவுள்ள ஸகலசாஸ்த்ரங்களையும் மாதுல ஸகாசத்திலேயே இருபது திருநக்ஷத்ரத்திற்குள் அதிகரித்து உபயவேதாந்த ரஹஸ்யார்த்த ஸம்ப்ரதாயங்களையும் கேட்டுத்து, வைநதேயமந்த்ர உபதேசமும் பெற்று ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராக விளங்கிவருகையில், ப்ராப்தகாலத்திலே க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்து ஆவிர்பாவிக்காமல் ஸ்ரீ காஞ்சியிலேயே ஸாமான்ய விசேஷ சாஸ்த்ரப்ரவசநங்கள் செய்தருளா நின்றார்.

இங்ஙனே நிகழ்ந்துவருகையில் ஒருநாள் தென்திசைத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்யத் திருவுள்ளங்கொண்டு பேரருளாளனது நியமனம்பெற்றுப் புறப்பட்டெழுந்தருளுகையில், பரமபாவநமான கருடநதியின்கரையில் தெய்வநாயகனுடைய ஸந்நிதான ஸாரஸ்யத்தையும் ஔஷதாத்ரியின் வாய்ப்பையும் நோக்கி அவ்விடத்திலே சிலகாலம் வஸிக்கத் திருவுள்ளமாய், அத்திருமலையின்கண் வீற்றிருந்து முன்பு ஸ்வாசார்யர் ஸந்நிதியிலே பெற்றிருந்த வைநதேய மந்திரத்தை நியதராய் ஆவ்ருத்திபண்ணிக்கொண்டிருக்க, ஒருநாள் ஸுப்ரஸந்நராய் ஸாக்ஷாத்காரம் தந்தருளின பெரியதிருவடி ஸ்ரீ ஹயக்ரீவ மந்த்ரத்தை யுபதேசித்துச் செல்ல, பிறகு ஆங்கு அழகியசிங்கர் திருமுன்பே ஹயக்ரீவ மஹாமந்த்ரத்தை நெடுநாள் ஜபித்துக் கொண்டெழுந்தருளியிருக்க, வெள்ளைப் பரிமுகரும் ஸுப்ரஸந்நராய்க் காட்சிதந்து தம்முடைய வாக்கின் அம்ருதத்தை யூட்டி அநுக்ரஹித்து மறைந்தருள, ஆசிரியர் பரமாநந்த பாராவாரநிமக்நராய்க் க்ருதார்த்தராய் எழுந்து ஹயக்ரீவ ஸ்தோத்ரம், கருடபஞ்சாசத் என்ற இரண்டு ஸ்தோத்ரங்களை விண்ணப்பஞ்செய்து, தெய்வநாயகனையும் திருவடி தொழுது, தேவநாயக பஞ்சாசத், அச்யுதசதகம் (ப்ராக்ருத பாஷாமயஸ்தோத்திரம்), கோபாலவிம்சதி, (ரகுவீரகத்ய மெனவழங்கப்படுகிற) மஹாவீரவைபவம் என்ற ஸ்தோத்ரங்களையும், மும்மணிக்கோவை, நவரத்தின மாலை, பந்துப்பா, கழற்பா, அம்மானைப்பா, ஊசற்பா, ஏசற்பா என்கிற தமிழ்ப் பிரபந்தங்களையும் பணித்தருளினார்.

பிறகு தெய்வநாயகப் பெருமானிடம் நியமனம் பெற்றுக்கொண்டு, "பாவருந்தமிழால் பேர்பெறு பனுவற்பாவலர் பாதிநாளிரவில், மூவருநெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்கிறபடியே பொய்கை பூதம் பேயாழ்வார்கள் கூடிக்குலாவி அநுபவித்து மகிழ்ந்த திருப்பதியாகிய திருக்கோவலூரில் ஆயனாரைத் திருவடி தொழவிரும்பி அங்கெழுந்தருளிச் சிலகாலம் வாழ்ந்து அப்பெருமான் விஷயமாக "தேஹளீசஸ்துதி" என்கிற ஸ்தோத்ரமும ருளிச் செய்தார். அதில் 6, 7, ச்லோகங்களில் முதலாழ்வார்கட்கும் எம்பெருமானுக்கும் நேர்ந்த பரிமாற்றம் வெகு அழகாகப் பேசப்பட்டுள்ளது.

[தீபேந கேநசித சீதருசா நிசீதே ஸ்நேஹோபபந்நபரி சுத்த குணார்ப்பிதேந, தந்மாவகாசரிபீடம் தத்ருசு: பவந்தம் ஸ்வாத்யாயயோகநயநாச் சுசய: கவீந்த்ரா:] யோகிகளில் தலைவராகிய முதலாழ்வார்களென்னும் செந்தமிழ்க் கவித்தலைவர்கள் ஒரு நாள் நள்ளிரவில் விலக்ஷணமான பொருவிளக்கேற்றி நெருக்கத்திலுள்ளே ஆயனாரைக் கண்டு கொண்டனர் என்பது கருத்து.

[காஸார பூர்வ கவிமுக்ய விமர்த ஜந்மா பண்ணதடேக்ஷு-ஸம்பகஸ்ய ரஸோ பயூஷ ஸ்யந்தே, த்வத்பாத பத்ம மதுநி த்வதநந்ய போக்யே நூநம் ஸமாச்ரயதி நூதந - சர்க்கராத்வம்]

பெண்ணையாற்றங்கரையில் கரும்புபோல் வளர்ந்திராநின்ற ஆயனார், பொய்கையாழ்வார் முதலான மூவரோடும் நெருக்குண்டு பிழியப்பட்டதனால் உண்டான ரஸமானது [விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:] என்ற சுருதியின்படி அவரது திருவடித்தாமரைகளி லுண்டான தேன்பெருக்கில் சர்க்கரையாகக் கலந்ததுபோலும் என்றவாறு. இந்த இரண்டு ச்லோகரத்னங்களும் பக்தர்களுக்கு விசேஷித்து அநுஸந்தேயங்கள்.

இங்ஙனம் திருக்கோவலூரில் சிலகாலம் எழுந்தருளியிருந்து அங்குள்ளாருக்கு வேதாந்தக்ரந்த ப்ரவசநமும் செய்தருளி, பிறகு யாத்திரையடைவே ஸ்வாவதாரஸ்தலமான பெருமாள்கோயிலுக்கு மீண்டெழுந்தருளி அங்கு விசேஷத: க்ரந்தப்ரவசநம் செய்தருளுங் காலத்தில், பெருந்தேவித் தாயார் விஷயமாக ஸ்ரீஸ்துதியையும், பேரருளாளன் விஷயமாக வரதராஜபஞ்சாசத் என்னும் ஸ்தோத்ரத்தையும், அடைக்கலப்பத்து, அர்த்த பஞ்சகம், ஸ்ரீவைஷ்ணவதினசரி, திருச்சின்னமாலை, ஹஸ்திகிரிமாஹாத்மியம் முதலான தமிழ்ப் பிரபந்தங்களையும், ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் விஷயமான வேகாஸேது ஸ்தோத்ரத்தையும், அட்டபுயகரத்தெம்பெருமான் விஷயமான அஷ்டபுஜாஷ்டகத்தையும், விளக்கொளி யெம்பெருமான் விஷயமான சரணாகதி தீபிகை யென்கிற தீபப்ரகாசஸ்தோத்ரத்தையும், வேளுக்கையெம்பெருமான் விஷயமான காமாஸிகாஷ்டகத்தையும், திருப்புட்குழிப்பேரேற்றுப் பெருமாள் விஷயமான பரமார்த்தஸ்துதியையும் அருளிச் செய்தார்.

ஸ்வாமி, பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருக்குங் காலத்தில் பேரருளாளனுக்கு வைகாசித் திருநாள் தொடக்கமாயிற்று. நாடோறும் மேற்கே யெழுந்தருளிக் கச்சபேச்வராலய வாசலில் இயல்தொடங்கி ஸேவிப்பது வழக்கமாதலால் அப்படியே தொடக்க மாருங்காலத்தில் அங்குள்ள சைவர்கள் திரண்டுவந்து "ஆழ்வார்களின் தமிழ்ப் பிரபந்தங்களைப் பெருமாள் திருமுன்பே அநுஸந்திப்பதற்கு சாஸ்த்ரப்ரமாணங்கள் இருக்குமானால் அவற்றை யெடுத்துரைத்தல்லது இங்கு இயல்தொடங்கலாகாது" என்று தடைசெய்ய, அப்போது அங்குள்ளாரில் தலைவராயிருந்த தேசிகன், திவ்ய ப்ரபந்தங்களின் பெருமைகளையும், எம்பெருமான் திருமுன்பே இவற்றை ஸேவிக்கவேண்டியது மிக அவசியம் என்பதையும் பஹுதரப்ரமாணங்களுடன் எடுத்துரைக்க, சைவர்கள் வாய்மாண்டு மீண்டு போயினர். [இந்த வரலாறு ஸ்வாமியின் வைபவநூல்களிற் காணப்படவில்லை. இது கூரத்தாழ்வானுடைய சரிதையிற் சேர்ந்தது என்பாருமுளர். உண்மையை ஸம்ப்ரதாயம் வல்ல பெரியார்வாய்க் கேட்டுத் தெளிக.]

* திருமலைமால் திருமணியாய்ச் சிறக்க வந்தருளின நம் வேதாந்த தேசிகன் ஸர்வதோமுகமான ஞானம் படைத்தது போலவே விரக்தியையும் லோகவிலக்ஷணமாகப் பெற்றவராதலால் கூரத்தாழ்வானைப் போலவே தாமும் உஞ்சவ்ருத்தியையே கொண்டு பெருமாள் திருவாராதனத்தைக் குறையற நடத்திக்கொண்டு செந்தமிழும் வடமொழியும் திகழ்ந்த நாவர்க்கு உபய வேதாந்த க்ரந்தப்ரவசநம் செய்தருளாநின்றுகொண்டு *கார்மேனி யருளாளர் கச்சிப்பதியிலே பேரருளாளனை மங்களாசாஸநஞ்செய்து கொண்டெழுந்தருளி யிருந்தார். இவருக்குப் பரம மித்திரரான ஸ்ரீவித்யாரண்ய ஸ்வாமிகள் விஜயநகர மஹாராஜனிடத்தில் மிகுந்த வால்லப்யம் பெற்றுப் பல்பல வித்வான்களை ஆதரிப்பதற்குரிய ஸௌகர்யங்களை யுடையரா யிருந்தபோது இந்த ஸ்ரீதேசிக சிகாமணியை ஸ்மரித்து இவருடைய ஏழைமையைப் போக்கிச் செல்வச் சிறப்பைப் பண்ணக்கருதி அந்த விஜய நகராதீசனிடத்திற்கு எழுந்தருளுமாறு ப்ரார்த்தநா பத்திரிகையை அனுப்பினார். அதனைக் கடாக்ஷித்தருளின ஸ்வாமிதேசிகன் தம்முடைய நிஷ்டா விசேஷத்தை அந்த வித்யாரண்ய ஸ்வாமி அறிந்திருந்தும் வீணாக இப்படி ஆஹ்வாநம் பண்ணுகிறீரே! என்று திருவுள்ளம் கொண்டு, அவருடைய பத்திரிகைக்கு உத்தரமாக,

ந மேபித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம் !
அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம்.

என்கிற ச்லோகத்தை யெழுதியனுப்ப, அவரும் அதைக் கண்டு, ஸ்வாமி தேசிகனிடத்தில் அவர்தாம் வைத்திருந்த ப்ரீத்யதிசயத்தினால் எப்படியாவது இவர்க்கு அபரிமித த்ரவ்ய லாபம் பண்ணிவைக்க வேணுமென்கிற ஆசையினால் மீண்டும் மிக நிர்ப்பந்தித்துப் பத்ரிகை விடுக்க, [மஹாராஜன் மூலமாகவும் சிறந்த மரியாதையுடன் ஆஹ்வாநம் பெறுவிக்க] அப்போது ஸ்வாமி அநுக்ரஹித்தருளியனுப்பிய ச்லோக ரத்னங்கள் வைராக்ய பஞ்சகமென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும். [இது அடியேனது விரிவுரையுடன் உள்ளது.]

ஒரு மாயாவாதிஸர்வ்பாவலி கச்சியில் வந்து ஸ்வாமியோடு தர்க்கித்துத் தோல்வி பெற்றதனால் வருந்தி இவர்க்கு ஏதேனும் இன்னல் விளைக்கவேணுமென்றெண்ணித் தனக்குள்ள க்ஷுத்ரமந்த்ரவாத சக்தியினால் ஸ்வாமி திருமாளிகைக்கு அருகிலுள்ளதொரு குளத்தில் தண்ணீரருந்தி அது ஸ்வாமியின் திருவுதரத்திலே புகுந்து மஹோதர மாகும்படி செய்ய, இந்த மாயச்செய்கையை அறிந்த ஸ்வாமி தம் திருமாளிகைவாசல் தூணை நகத்தினால் கீறியருள, அதில் நின்றும் தண்ணீர் பெருக, ஸ்வாமியின் திருவுதரம் பழையபடியாயிற்று. இது கண்ட அந்த மாயாவாதி, ஸ்வாமியின் சக்திவிசேஷத்திற்கு மிக வியந்து திருவடியில் தொழுது சென்றான்.

ஒரு நாள் ஒரு ப்ரஹ்மசாரி, ஸ்வாமி ஸந்நிதியில் வந்து தெண்டனிட்டு "அடியேன் மிகவும் அகிஞ்சநன்; விவாஹம் செய்துகொள்ள விருப்பமுடையேன்; ஸ்வாமி த்ரவ்ய ஸஹாயம் செய்தருளவேணும்" என்று பிரார்த்தித்தான். அது கேட்டு ஸ்வாமி புன்முறுவல் செய்து "பிள்ளாய்! நானோ உஞ்சவ்ருத்தி பண்ணிப் பெருமாள் திருவாராதனம் நடத்துகிறவன் என்பது உனக்கு நேரில் தெரியும்; இப்படியிருக்க விசேஷதனிகர்களை விட்டு என்னிடம் வந்து பொருள் யாசிப்பதற்குக் காரணமென்ன?" என்று வினவ, "ஸ்வாமி திருவுள்ளம் பற்றினால் அல்பமானதொன்றுமில்லையென்றும் வேண்டிய பொருள் கிடைக்குமென்றும் பல பெரியார்சொல்லக் கேட்டதனாலே ஸ்வாமியை ப்ரார்த்திக்கலானேன்" என்று அவன் விடைகூற, ஸ்வாமியும் அது கேட்டு 'அப்படியா? பாகவதர்கள் அங்ஙனம் அருளிய பக்ஷத்தில் தவறாது பொருள் கிடைத்தே தீரும்; இனி விசாரப்படாதே; ஸ்ரீ ஸ்துதியை அநுஸந்தானம் செய்துகொண்டு பெருந்தேவித் தாயாரை ப்ரதக்ஷிணம் செய்துவா; அநுக்ரஹமுண்டாகும்' என்று கூறி, ஏற்கெனவே பெருந்தேவித்தாயார் விஷயமாக அருளிச்செய்திருந்த ஸ்ரீஸ்துதி என்னும் ஸ்தோத்திரத்தை அவனுக்குக் கண்டபாடம் செய்வித்தருளினர். அவனும் அற்றைநாள் முழுதும் அந்த ஸ்துதியையே ஆவ்ருத்தி செய்துகொண்டிருந்து பிற்றைநாள் காலை ஸ்வாமி ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு பேரருளாளன் ஸந்நிதிக்கு மங்களாசாஸநார்த்தமாக எழுந்தருளும்போது அந்த ப்ரஹ்மசாரியும் ஸ்வாமியைப் பின் சென்று ஸ்ரீஸ்துதியைச் செவிக்கினிதாக அநுஸந்தித்துக்கொண்டே பெருந்தேவித்தாயாரை வலம்வர,

"ஆர்த்தத்ராணவ்ரதிபி ரம்ருதாஸாரநீலாம்புவாஹை: அம்போஜாநாமுஷஸி மிஷதா மந்தரங்கைரபாங்கை:, யஸ்யாம்யஸ்யாம் திசி விஹரதே தேவி! த்ருஷ்டிஸ் த்வதீயா தஸ்யாம்தஸ்யா மஹமஹமிகாம் தன்வதே ஸம்பதோகா:. யோகாரம்பத்வரிதமநஸோ யுஷ்மதைகாந்த்ய யுக்தம் தர்மம் ப்ராப்தும் ப்ரதமமிஹ யே தாரயந்தே தநாயாம்! தேஷாம் பூமௌ தநபதிக்ருஹாதம்பராத் அம்புதேர் வா தாரா நிர்யாந்த்யதிகமதிகம் வாஞ்சிதாநாம் வஸூநாம்" என்கிற ச்லோகங்கள் அநுஸந்திக்கப்படுமளவில் தாயார் ஸந்நிதியில் திருமுன்பே ஸ்வர்ணதாரைகளின் வர்ஷம் வாய்த்

நிட, அனைவருங்கண்டு அதிசயித்தனர். பிரமசாரியும் க்ருதார்த்தனும் விடைபெற்றுச் சென்றனன்.

ஸகல வகைகளாலும் ஸ்வாமியை நிகர்த்தவரான ஒரு திருக்குமாரர் களஸம்வத்ஸரம் ஆவணிமாதத்து ரோஹிணி நக்ஷத்ரத்தில் திருவவதரிக்க, அவர்க்கு வரதாசாரியர் என்று திருநாமமிடப்பட்டது. இவரும் ப்ராப்த காலங்களில் உபநயனாதி ஸம்ஸ்காரங்களைப் பெற்று "யஸ்மாதேவ மயா ஸர்வம் சாஸ்த்ரமக்ராஹி நாந்யத:" என்று இவர் தாமே பேசியுள்ளபடி ஸ்வாமி ஸந்நிதியிலே ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அதிகரித்து விளக்கில் கொளுத்தின விளக்குப் போலே விளங்கி வந்தார்.

ஸ்வாமிதேசிகனுக்கு வேதாந்தாசார்யர் என்றும், கவிதார்க்கிக கேஸரி என்றும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்றும், ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்றும் இங்ஙனே பல பிருதுகள் ப்ரஸித்தமாய் நிகழ்ந்தன. இவற்றுள் வேதாந்தாசார்யர் என்கிற பிருது ஸ்ரீரங்கநாதனால் அளிக்கப்பட்டதென்னுமிடம் ஸ்வாமியின் திவ்ய ஸூக்திகளினாலேயே தெரியவருகின்றது; ஸங்கல்பஸூர்யோதய ப்ரஸ்தாவனையில்—[ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ்ஞாலப்த வேதாந்தாசார்யபத:] என்றும், அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் [ஸ்வஸ்தி ஸ்ரீரங்கபர்த்து:] என்னும் ச்லோகத்தில் [தேந தேவேந தத்தாம் வேதாந்தாசார்ய ஸம்ஜ்ஞாம்] என்றும் அருளிச் செய்யப்பட்டுள்ளமை காண்க. ஸ்தோத்ர பாட்யத்தின் முடிவில் [ஸ்வகமிதி ஹரிதத்தம் யாமுநஸ்தோத்ரவ்ருத்த்யா வ்யவ்ருணுத நிகமாந்தாசார்யகம் வேங்கடேச:] என்ற ச்லோகத்தில் ஹரிபதத்தினாலும், தயாசதகத்தின் முடிவில் [வேதாந்த தேசிகபதே விநிவேச்ய பாலம் தேவோ தயாசதகமேததவாதயந்மாம்] என்ற ச்லோகத்தில் தேவபதத்தினாலும் ஸ்ரீரங்கநாதனே குறிக்கப்படுகிறானென்றும் கொள்ளத்தக்கது. தர்மிஐக்யத்தால் ஸமன்வயம் காண்க.

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் முதலிய மற்ற பிருதுகள் வித்வான்களால் அளிக்கப்பட்டன. இதுவும் ஸ்ரீதேசிகதிவ்ய ஸூக்திகளினாலேயே தெரிகின்றது; ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் மேலேகுறித்தவிடத்தில் [கவிதார்க்கிகஸிம்ஹ இதி ப்ரக்யாத குணஸமாக்ய:] என்றும், ஸ்தோத்ர பாஷ்ய ஸமாப்தியில் [அகணிஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ கவிகதகம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர:] என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் காண்க. ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்கிற பிருது ஸ்ரீரங்க நாச்சியாரால் அளிக்கப்பட்டதென்றும் சொல்வதுண்டு.

ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்கிற பிருது மற்ற பிருதுகளைப்போல் ஸுப்ரஸித்தமாக ஸ்வாமிக்கு வழங்குவதில்லையாயினும், அக்காலத்தில் ஸதஸ்ஸுகளில் வித்வான்களால் வழங்கிவரப்பட்டதென்று விளங்குகின்றது. ஒரு ச்லோகத்தின் ஏகதேசத்திற்கு "ஸமஸ்யா" என்று பெயர். ஸமஸ்யா பூரணம் என்பது மஹா கவிகளின் கோஷ்டிகளில் ப்ரஸித்தம். ஒருவர் ஒரு பாதத்தையோ சில பதங்களையோ கவனஞ்செய்து வெளியிட்டால், மற்றொருவர் அப்பொழுதே பூர்ண ச்லோகம்படி அதனைப் பூர்த்திசெய்து வெளியிடுதல் ஸமஸ்யா பூரணமெனப்படும். கவிகளுக்கு இதுவொரு விநோதமான போது போக்கு.

தேசிகன் ஸமஸ்யைகள் கொடுப்பதிலும், பிறர் கொடுக்கும் ஸமஸ்யைகளைப் பூரணம் செய்வதிலும் மிகச்சிறந்த வல்லவர் என்பது விளங்க இவர்க்கு "ஸமஸ்யா ஸஹஸ்ரீ" என்ற விருது தோன்றியதென்பர். அங்ஙனே ஸ்வாமி அருளிச்செய்த ஸமஸ்யைகளோ பூரணங்களோ இப்போது ஒன்றும் கிடைக்காததனால் அப்ரஸ்துதமாயினவென்று சொல்லக் கேள்வி.

ஸ்வாமி ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று பிருது வஹித்து விளங்கியதில் பொறாமை கொண்ட ஒரு கொத்தன் ஸ்வாமி திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியிருக்கும்போது ஒரு நாள் அருகேவந்து, தேவரீர் எல்லாக்காரியங்களும் செய்ய வல்லமை பெற்றிருந்தாலன்றோ ஸர்வத

ந்த்ரஸ்வதந்த்ரரென்று விருதூதிப் புறப்படலாம்; நான் கிணறு கட்டுவேன்; அது கட்ட உமக்குத் தெரியாதல்லவோ? அப்படியிருக்க அந்த விருதை நீர் எங்ஙனே வஹிக்கலாம்? என்று ஆக்ஷேபிக்க, ஸ்வாமியும் புன்முறுவல் செய்துகொண்டே அவன் முன்னிலையிலேயே ஒரு கிணறு நிர்மாணஞ் செய்து அவனது செருக்கை யடக்கினர். இந்தக் கிணறு நாளைக்கும் பக்தர்கள் ஸேவிக்கத்தக்க நிலைமையிலுள்ளது.

மற்றொருகால் ஒரு பாம்பாட்டி, ஸ்வாமிஸந்நிதானத்தில் விடைகொண்டு 'நீர் ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரராகில் கொடிய பாம்புகளை ஆணையிட்டுக் கட்டுந்திறனும் உமக்குத் தெரிந்திருக்கவேண்டுமே; அந்த வல்லமையைக் காட்டுவீராகில் நீர் மெய்யே ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரே' என்று சொல்லிக்கொண்டே தான் ஜீவனார்த்தமாக வைத்திருந்த சில பாம்புகளைப் பெட்டியில் நின்றும் திறந்துவிட, அவையும் சீறிக்கிளம்ப, அப்போது ஸ்வாமி, இனி நாம் வெறுமனிருக்கலாகாதென்று கருதி ஸ்வைநதேய மந்த்ர ஜபத்துடனே தம்மைச் சுற்றிச் சில கோடுகள் போட, மிகக்கொடிய ஒரு ஸர்ப்பம் மாத்திரம் கோடுகளைக் கடந்து ஸ்வாமியை நெருக்கினவளவிலே, ஸ்வாமி உடனே ஸ்ரீகருடதண்டகத்தினால் பக்ஷிராஜனை ஆஹ்வானம் செய்தருள, அவனும் சடக்கென வந்து தோன்றி அந்த அரவங்களைக் கவ்விக்கொண்டு அகலவே பாம்பாட்டி தான் பங்கப்பட்டது மல்லாமல் தனது ஜீவனார்த்தமாக வைத்திருந்த பாம்புகளும் தொலைந்ததனால் பரிதாபம் மிக்கு ஸ்வாமி திருவடிகளிலே விழுந்து வேண்டிக்கொள்ள, ஸ்வாமியும் திருவுள்ளமிரங்கி மீண்டும் அந்தப் பாம்புகள் அவனுக்குக் கிடைக்குமாறு அநுக்ரஹஞ் செய்தருளினர்.

உலகில் கவனம் செய்வதில் மிகவும் குசலர்களான மஹாகவிகள் பலர் இருந்தாலும் ஸ்வாமியினுடைய கவித்வஸாமர்த்தியம் பரம விலக்ஷணமாயிருக்கும். 1. ஆசுகவி, 2. மதுரகவி, 3. சித்ரகவி, 4. விஸ்தாரகவி—என நான்கு வகையாக வகுக்கப்பட்டுள்ள கவிதையிலும் ஸ்வாமி நிகரற்றவர். "ஹடாதாக்ருஷ்டாநாம் கதிபயபதாநாம் ரசயிதா" என்கிற கணக்கிலே மிகவும் சிரமப்பட்டுப் பதங்களைக் கூட்டிக் கவிபண்ணுகை யன்றிக்கே சொற்களானவை "என்னைக்கொள் என்னைக்கொள்" என்று அஹமஹமிகயா வந்து நெருக்குண்டு கங்காப்ரவாஹம் போலே பெருக்கெடுத்து ப்ரவஹிக்கும் படியான ஆற்றல் அஸாதாரணமாக இங்குக் காணத்தக்கது.

ஒரு க்ஷண மாத்திரத்திலே அநேக ச்லோகராசிகளை அவதரிப்பிக்கும் சக்தியும் அந்த ச்லோகங்களெல்லாம் அர்த்த புஷ்டியோடும் சப்தபுஷ்டியோடும் கூடியிருக்கப் பெறுகையும், பத்மபந்தம், சக்ரபந்தம், முரஜபந்தம் என்றாற் போலே பலவகைப்பட்ட பந்தங்களிலே யமைத்து ச்லோகங்களை அவதரிப்பிக்க ஸங்கல்பித்த மாத்திரத்திலே அவை அழகாக அமையும் அதிசயமும், அவைதாமும் எண்ணிலா திருக்கப் பெற்ற ஆச்சரியமும் நோக்கு மிடத்து, கவிதாவதார பூமியாக ஸ்வாமியை அறுதியிடலாம்.

ஸ்வாமியின் பெருமைகளைக் கண்டு பொறாத சிலர் தங்கள் பொறாமைக்குப் போக்கு வீடாக, ஸ்வாமி திருமாளிகைக்குள்ளே எழுந்தருளியிருக்கும்போது வெளிவாசற் பட்டையில் பழைய பாதரக்ஷைகளைக் கட்டித் தொங்க விட்டு வைத்து வேடிக்கை பார்ப்பதற்காக மறைந்து நின்றார்களாம். ஸ்வாமியும் கார்யவசாத் வெளியே எழுந்தருளும்போது அந்தப் பாதரக்ஷைகள் தலையில் இடிக்க உடனே நிமிர்ந்து பார்த்து விஷய மறிந்து, "கர்மாவலம்பகா: கேசித் கேசித் ஜ்ஞாநாவலம்பகா:, வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று அநுஸந்தித்துக் கொண்டே யெழுந்தருள, இந்த அத்யவஸாய விசேஷத்தைக் கண்டு ஸ்வரூப

பிக்ஷை பெற்ற அந்த பொறாமைக்காரர்கள் சடக்கெனத் திருவடிகளிலே விழுந்து பொறுப்பித்துக்கொண்டு போனார்கள். என்பதாக ஒரு ஐதிஹ்யம் சொல்லி வருகிறார்கள். *கர்மாவலம்பகா:* ஸ்துத்பாதி ச்லோகத்தை ஸ்வாமி ஸாதித்திருப்பதுண்டு; அதற்குச் சார்பாக இந்த ஐதிஹ்யம் கல்பிதமாயிருக்கக்கூடும் என்று சில மஹான்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். வேதாந்த தேசிக வைபவ ப்ரகாசிகா ஸ்தோத்திரத்தில் இவ்வைதிஹ்யம் காணமையாலே விப்ரதிபத்திக்கு இடமில்லை யென்றும் சொல்லுகிறார்கள்.

ஸ்வாமியினுடைய திருத்தகப்பனாருக்குத் திருவத்யயனம் ப்ராப்தமாக, வழக்கப்படி மூன்று ஸ்வாமிகளை முன்னமே நிமந்த்ரணம் செய்துவைக்க, அவர்களும் இசைந்திருந்து சில பொறாமையாளர்களின் துர்ப்போதனைக்கு வசப்பட்டுத் தம்தம் க்ருஹங்களிலேயே போஜனம் செய்து விட்டு, ஸமயத்தில் சில வ்யாஜோக்திகளைச் சொல்லியனுப்பி ச்ராத்தத்தைக் கெடுக்கப் பார்த்த வளவிலே ஸ்வாமியும் அந்த அகாலத்திலே வேறொருவரையும் நிமந்த்ரணம் செய்ய முடியாமல் முசித்திருந்து, பிறகு ஒருவாறு உள்ளம் தேறி ஸ்ரீஹயக்ரீவனையே ஆவாஹநம் செய்தருளி ஹோமம் முதலியவற்றையும் ஸக்ரமமாக நடத்தி, வரணம் முதலியவற்றையும் செய்து மூன்று இலைத்தளிகைகளைச் சேர்த்து ப்ரஸாதவ்யஞ்ஜநாதிகளைப் பரிமாறிப் பரிஷேசநாதிகளையும் பண்ணிவைத்துத் திருத்திரை சேர்த்து, திரைக்கு வெளியே தாம் நின்றுகொண்டு 'யதாஸாதகம் ஜுஷத்வம்' என்று ப்ரார்த்தித்து அபிச்ரவணம் ஓதிக்கொண்டிருக்க, ஸ்வாமியின் திருவுள்ளத் தூய்மைக்கு உகந்தருளின ஹயக்ரீவன் தாமே மூன்று இலைகளிலும் எழுந்தருளியிருந்து அமுதுசெய்யும் ஓசை அடங்ினவுடனே திரையைவிழ்த்து மேற்காரியங்களையும் யதாக்ரமமாக நடத்தி இஷ்டபங்க்தி போஜனத்தில் அமர்ந்தருளினார். அப்போது ச்ராத்தத்தைக் கெடுத்துவிட்டதாக எண்ணி ஆனந்திக்க அவ்விடம் வந்து சேர்ந்து மறைந்து பார்த்துக்கொண்டிருந்த பாதகிகள், ஸ்ரீ ஸ்வாமியின் திருமாளிகைவாசல் திண்ணையில் மஹா-தேஜஸ்விகளாக மூன்று ஸ்வாமிகள் அமுது செய்த திருக்கோலத்துடனே ஸேவை ஸாதிக்கக்கண்டு மிகவும் அதிசயித்து ஸ்வாமி திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் செய்து கொண்டு சென்றார்கள்.

ஸ்வாமி உஞ்சவ்ருத்தியினாலேயே (கூரத்தாழ்வான் போல்) தேஹயாத்ரையை நடத்திக்கொண்டு வந்தாராதலால் அதை இழிவாக நினைத்த சிஷ்யர்கள் அந்த உஞ்சவ்ருத்தியை நிவர்த்திப்பிக்க வேணுமென்றெண்ணி ஒரு நாள் தண்டுலத்துடன் ஸௌவர்ண த்ரவ்யங்களையும் சேர்த்து ஸமர்ப்பித்தார்கள். திருமாளிகைக்கு எழுந்தருளினபின் தேவிகள் அவற்றைக் காண்பிக்க ஸ்வாமி கடாக்ஷித்து அதைக் காஷ்டலோஷ்ட கீர்விசேஷமாக எண்ணி வீதியிலே இறைத்துவிட்டார்.

ஸ்வாமி ஒருகால் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு எழுந்தருளா நிற்கையில் வழியிடையே ஒருநாள் பகவதாராதனத்திற்கு ஸௌகரியமில்லாமற்போக, அன்று வெறும் தீர்த்தத்தையே பெருமாளுக்குக் கண்டருளப்பண்ணித் தாமும் ஸ்வீகரித்து மேலே வழி நடந்து இரவில் ஒரு த்ரைவர்ணிகனுடைய மனையருகில் விச்ரமித்திருக்க, அப்போது ஸ்ரீஹயக்ரீவன் ஸ்வரூபத்துடன் வெளியேறி அந்த த்ரைவர்ணிகனுடைய கொல்லையில் தானியங்களை யதேஷ்டமாக புஜித்துக்கொண்டிருக்க, அதனையறிந்து சென்று அவன் தன்னாலான மட்டும் துரத்திப்பார்த்தும் முடியாமல் இது ஸ்வாமியினுடைய குதிரையாயிருக்குமென்று ஊஹித்து உடனே ஸ்வாமியைத் தட்டி யெழுப்பிக் குதிரையைப் பிடித்துக் கட்டவேணுமென்று வேண்ட, ஸ்வாமியும் திடுக்கிட்டு இதுவெள்ளைப்பரிமுகருடைய விளையாடல்போலு மென்று அத்யவஸித்து, பால்வாவமைத்து நிவேதனம் செய்தருளினவாறே குதிரை ... ரோன் அந்தர் ஹிதரானார்.

ஸ்வாமி ஒரு ஏகாதசி நாளில் ஸ்ரீ ரங்கநாதனை மங்களாசாஸனம் செய்து நிற்கையில் பொறாமைக்காரர்களின் ப்ரேரணையால் அர்ச்சகர் ஸ்வாமி திருக்கையில் பொங்கல் ப்ரஸாதத்தைக் கொணர்ந்து கொடுக்க, ஸ்வாமியும் அதைத் தமது திருக்கைகளில் வாங்கி வைத்துக்கொண்டு பெரிய பெருமாளை நோக்கி 'ஸ்வாமின்! அடியேனை இங்ஙனே சோதிக்கத் திருவுள்ளம் பற்றலாமோ? உபவாஸதினமான இன்று இவ்வன்னத்தைப் பாவியேன் என் செய்வேன்? ஓலைப்புறத்து நியமனம் பெரிதோ? இப்போதைய நியமனம் பெரிதோ? நியமித்தருள வேணும்' என்று விண்ணப்பம் செய்ய; ஸ்ரீ ரங்கநாதன் மற்றோர் அர்ச்சகமுகேன 'பிள்ளாய்! இது நமது ஆஜ்ஞையன்று; ஏகாதசியன்று ஒரு நாளும் அன்னம் ஸ்வீகரிக்கத்தக்கதன்று காண்' என்று நியமிக்க, ஸ்வாமியின் ப்ரபாவாதிசயத்தைக் கண்டு அர்ச்சகாதிகள் திருவடி வணங்கி அபசாரக்ஷாமணம் செய்து கொண்டார்கள்.

ஸ்வாமி நம்பெருமாள் ஸந்நிதியில் உபயவேதாந்த ப்ரவசனம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்த காலத்தில் ஒருநாள் தமது திருமாளிகைவாசல் திண்ணையில் வீற்றிருந்து மிகப் பெரிய விஷய விசார மௌனத்தில் ஆழ்ந்திருக்கையில் 'கந்தாடை லக்ஷ்மணாசார்யர்' என்கிற ஆசார்ய பீடஸ்தரொருவர் தம்முடைய சிஷ்யர்களுடன் அந்த வீதி வழியே சென்று கொண்டிருந்தார். அதை தேசிகன் கவனியாமல் எழுந்தருளியிருந்ததற்காக அந்த சிஷ்யர்களிலொருவர் மிகச் சினந்து தேசிகனிடம் ஓடிவந்து 'நமது மஹாசார்யர் எழுந்தருளா நிற்க நீர் இங்ஙனே அவமரியாதை காட்டி உட்கார்ந்திருப்பது என்ன பேதைமை!" என்று ஆரவாரித்து ஸ்வாமியின் திருவடிகளைப் பிடித்து இழுத்து விட்டுச் சென்றார். ஸ்வாமியும் திடுக்கிட்டெழுந்து இப்படி வீணாக பாகவதாபசாரம் நேர்ந்து விட்டதே! என்று சாலவும் திருவுள்ளமுடைந்து குலைப்பட்டு ஏகாந்த வாஸத்திலே திருவுள்ளம் சென்று கோயிலைவிட்டுப் புறப்பட்டு, ஸத்யமங்கலத்தில் எழுந்தருளி அங்கே வெகுகாலம் வாழ்ந்து வந்தார். "சிஷ்யபாபம் குரோரபி" என்பது சாஸ்த்ர மாகையாலே அந்த சிஷ்யன் செய்த பாபம் அவனது குருவான லக்ஷ்மணாசார்யர் செய்ததாகத் தீர்ந்து அவருடைய மேனியில் ஒரு வைவர்ணியம் உண்டாயிற்று. பல சிகித்ஸைகள் செய்தும் "பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிது வல்லால்" என்றாப்போலே அந்த வியாதி மேன்மேலும் அதிகரித்து வருகிறபடியைக் கண்ட அவர் 'இது தேசிகன் திருவடிகளில்பட்ட அபசாரத்தின் பலனே' என்று ஆப்த வசனங்களாலே அறிந்திட்டு ஸபரிவாரராய் ஸ்வாமி தேசிகனிடத்தே சென்று பொறுமை வேண்டிச் சிலகாலம் ஸ்வாமி திருவடிவாரத்திலேயே வஸித்திருந்து நித்யம் ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்துப் போந்தார். அதன் பலனாக அவர் தீராத நோய் தீரப்பெற்றதுமன்றி ஒரு மகப்பேறும் உண்டாகப் பெற்றார். தீர்த்த மஹிமையினாலேயே பிறந்த அந்த மகனுக்கு தீர்த்தப் பிள்ளையென்றே பெயரிட்டார். அந்தப் பிள்ளை தேசிகன் விஷயமாக ஒரு அந்தாதி பணித்திருப்பதாகவும் ப்ரஸித்தி. பிறகு அந்த லக்ஷ்மணாசார்யருடைய ப்ரார்த்தனைக் கிணங்கி தேசிகன் திருவரங்கம் பெரியகோயிலேற மீண்டெழுந்தருளினார்.

இங்ஙனம் கோயிலில் வாழ்ந்தருளும் காலத்தில் ஒரு நாள் துலுக்கர்கள் ஸஹஸா படையெடுத்து வருகையில் அப்போது கோயிலில் இருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் ஸதுபாயமாகப் பெருமாளுக்குச் சேமக்காப்புச் செய்து பல திசைகளிலும் பிரிந்தோட நேர்ந்தது. அப்போது ஸ்வாமி தேசிகனும் மேற்கே எழுந்தருளும்படியாயிற்று. அப்போது கோயிலில் ச்ருதப்ரகாசிகா பட்டர் துருஷ்கயவனர்களின் கலவு பொறுக்க மாட்டாமல் உயிர் துறக்குமளவாக ஏற்கெனவே தாமருளிச் செய்திருந்த ச்ருதப்ரகாசிகா ஸ்ரீகோசத்தை ஸ்வாமி திருக்கையிலே கொடுத்து "இதை ஸத்பாத்ர விநியோகம் செய்து போரீர்" என்று நியமித்து, தம்முடைய இரண்டு குமாரர்களையும் ஸ்வாமி யிடமே

[illegible] திருநாட்டுக் கெழுந்தருளினர். அப்போது ஸத்யமங்கலம் முதலான மேல் நாட்டுப் ப்ரதேசங்களிலே வாழ்ந்து திருநாராயணபுரம் சென்று சேர்ந்த தேசிகன் திருவரங்கம் பெரியகோயில் நிஷ்கண்டகமாக வேணுமென்றும், பழையபடியே தாம் கோயிலிலே வாழப் பெறவேணு மென்றும் கொண்ட மநோரதங்களைப் பெய்து அபீதிஸ்தவ மென்னும் அரிய பெரிய ஸ்தோத்ர மொன்றை யருளிச்செய்து சிஷ்யர்களுடனே நித்யாநுஸந்தானம் செய்து வந்தார்.

அபீதிஸ்தவாநுஸந்தானத்தின் பயனாக அடியார்களும் அரங்கநகரும் அவத்யம் நீங்கி அமரிக்கை யடைந்ததாகக் கேள்வியுற்ற ஸ்வாமி தாமும் போரவுமுகந்தருளி நம்பெருமாள் ஸந்நிதிக்கே மீண்டும் வந்து சேர்ந்தார். அப்போது கோப்பணார்யன் என்னும் பரமபாகவதோத்தமனான செஞ்சி சிற்றரச னொருவன் துருஷ்கர்களை யெல்லாம் வழியொழித்து ஆபத்துக்களை அறவேயொழித்து நம்பெருமாளையும் யதாவத்தாகத் திருப்ரதிஷ்டை செய்வித்து நித்யோத்ஸவாதிகளை யெல்லாம் நிலைபெறுத்தியிருந்த சிறப்புக்களைக் கடாக்ஷித்துத் திருவுள்ளம் மகிழ்ந்திருந்தார்.

* வேள்வும் விழவும் வீதியிலென்றும் மருத ஊர்களிலே தலையான அந்தத் தென்னரங்கத்திலே மார்கழித் திருநாளான திருவத்யயந மஹோத்ஸவம் ப்ராப்தமான ஸமயத்திலே புறச்சமயிகள் திரண்டுவந்து “தமிழ்ப் பாஷையிலமைந்த ப்ரபந்தங்களை இங்கே ஓதுவதற்கும் அந்தப் ப்ரபந்தங்களைப் பகர்ந்த ஆழ்வார்களை இங்கே போற்றுவதற்கும் ப்ரமாணம் காட்டினு லல்லது இத்திருநாள் செய்ய வொட்டோம்” என்று தடைசெய்து நிற்க, அப்போது ஸ்வாமி தேசிகன் * தாழாதே சார்ங்கமுதைத்த சரமழை போல் ப்ரமாணோபந்யாஸ பூர்வகமாக அவர்களுடைய துர்வாதங்களை நிரஸித்தருளி ஒரு விப்லவமும் குன்றாமே அவ்வுத்ஸவம் முன்னினும் சிறந்து நடைபெறுமாறு சேமம் செய்தருளினர்.

இங்ஙனம் ஸ்வாமி கோயிலில் சீரும் சிறப்பும் பொலிய வாழ்ந்தருளா நிற்குங்காலத்திலே, அத்வைத மத ப்ரவர்த்தகரா யிருந்த வித்யாரண்யருக்கும் த்வைத மத நிர்வாஹகரா யிருந்த அக்ஷோப்ய முனிவர்க்கும் வேதாந்த வாக்யார்த்தம் நடந்து வருகையில் அதில் ஜயாபஜய பரிஷ்கரிக்கத் தகுதியான மத்யஸ்தர் நேர்படாமல் அவர்கள் தங்களுடைய வாத விவாதங்களை யெழுதி ஸ்வாமி தேசிகனிடம் அனுப்ப, ஸ்வாமி அவற்றைப் பராமர்சித்து அக்ஷோப்ய முநிபக்ஷத்தில் வெற்றியைத் திருவுள்ளம் பற்றி * அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முநிரச்சிநத் * என்கிற ச்லோகஸம்வலிதமான காரிகாரத்நத்தை அனுக்ரஹித்து அனுப்பியருளினர்.

க்ருஷ்ணமிச்ரன் என்கிற ஒரு அத்வைத வித்வான் இயற்றி யிருந்த ப்ரபோத சந்த்ரோதய மென்கிற வொரு நாடகக்ரந்தத்தை அவனுடைய அநுபந்திகள் ஸ்ரீரங்கத்திலே கொண்டுவந்து ப்ரசாரம் செய்து கொக்கரித்துக் கொண்டிருந்த வளவில் அதை ஸ்வாமி தேசிகன் திருச்செவிசாத்தி ‘இதற்கெதிராக ஸங்கல்ப ஸூர்யோதய நாடகம் காணலாகாதோ?’ என்று புன்முறுவலோடே பணித்தாராம்; ‘அப்படியும் ஒரு நாடகமுண்டோ?’ என்று ப்ரஸ்தாவமாக, “நாளையுதயத்திலே காட்டுகிறேன் காணீர்” என்று ஸாதித்து உடனே அந்த திவ்ய நாடகத்தைத் திருவாய்மலர்ந்தருளி ஸூர்யோதயத்திலே தோன்றுவித்தருளினர். அவ்வதிசயத்தைக் கண்டு அனைவரும் அகங்குழைந்தார்கள்.

ஸ்வாமி பணித்த ஸ்தோத்ரங்களுக்குள் அற்புதமான பாதுகாஸஹஸ்ரம்; இது அழகிய மணவாளனுடைய திருவடி நிலையை ஆயிரம் ச்லோகங்களால் ஆச்சரியமாக வருணிக்கும் ஸ்தோத்ரம். இதனை ஸ்வாமி அருளிச்செய்தது ஓர் இரவின் ஏகதேசத்திலே யென்பர். இதனை யருளிச் செய்ததற்குக் காரணம் இன்னதென்பதை 'ஆசார்ய சம்பூ' என்று ப்ரஸித்தமான வேதாந்தாசார்ய விஜயகாவ்யம் ஆறாவது ஸ்தபகத்தில் கூறியுள்ளது; ஸ்வாமியின் பெருமையைப் பொறாதவனும், 'காமே ஆநகவீ' என்று செருக்குற்றவனுமான ஒரு இதர ஸம்ப்ரதாய கவியோடு ஸ்பர்த்தை யுண்டாகி அதனால் ஸ்வாமி இந்த க்ரந்தம் அருளிச்செய்ய லாயிற்றென்கிறார் சம்பூகாரர். வைபவப்ரகாசிகா ஸ்தோத்ரத்திலோ வென்னில் (ச்லோ. 114.) "ஸம்ப்ரார்த்திதஸ் ஸம்ஸதி ஸம்ப்ரதிஷ்ட்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிகாயாம்" என்கிற ச்லோகத்தினால், திருவோலக்கத்தில் சில மஹான்கள் ஸ்வாமியைப் ப்ரார்த்திக்க அதனால் இந்த ஸ்தோத்ர மருளிச் செய்ததாகச் சொல்லிற்று.

ஒரு நாள் சில பொறாமையாளர்களால் தூண்டப்பட்ட சில்பி யொருவன் ஸ்வாமியின் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர பிருதை ஆக்ஷேபித்து சில்பத்திலும் ஸ்வாமியினுடைய அப்ரதிம சாதுர்யத்தை உலகமறிய ப்ரகாசிப்பிக்கவேண்டிக் கொக்கரித்து நிற்க, அப்போது ஸ்வாமியும் தம்முடைய சில்பசாஸ்த்ர பாண்டித்யத்தை நன்கு புலப்படுத்தித் தம்மைப்போல ஒரு விக்ரஹம் ஏறியருளப்பண்ணிக்காட்ட, ஸாமுத்ரிகமான அதன் பொருத்தத்தைக் கண்டு வியந்த அந்த சில்பி தோற்றேனென்று திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் வேண்டிச் சென்றான். அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸ்வாமி தாம் ஆரத் தழுவியருளித் திருக்குமாரர்பாடே கொடுத்தருளினரென்று ப்ரஸித்தம்.

இங்ஙனேயான அதிமாநுஷ திவ்யப்ரபாவங்களைப் பண்ணியுரைக்குங்கால் பாரதமாம் கடலனவரும் திசை யெட்டினுள்ளும் மிடைதந்த கலியிருளை உபதேசங்களாலும் அநுஷ்டானங்களாலும் பலபல திவ்யக்ரந்த ரசனைகளாலும் போக்கியருளி "பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை" என்ற ஆழ்வாரருளிச் செயலை அர்த்தவத்தாக்கி யருளினவர்.

எப்படிப்பட்ட அதிசயித ப்ரபாவர்களையும் எம்பெருமான் ஒருகால் தன்னடிச் சோதிக்கு வரவழைத்துக் கொள்வதென்பது ஒரு நியமமாகக் காணுதலால், ஸ்வாமியையும், * சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியே வரவழைத்துக் கொண்டு ஒழிவில் காலமெல்லாம் வழுவிலா வடிமைகொண்டருளத் திருவுள்ளம்பற்றின வளவிலே, ஸ்வாமியும் ஸௌம்ய ஸம்வத்ஸரத்துக் கார்த்திகைப் பௌர்ணமி நன்னாளில் இருள் தருமாஞாலத்தை விட்டகன்று தெளிவிசும்பு திருநாட்டே றெழுந்தருளினர்.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் வைபவம் முற்றிற்று.

ஸ்ரீ

# மணவாளமாமுனிகள் வைபவம்.

" மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்."

## ப்ரவேசம்.

உபய விபூதி நாதனான எம்பெருமானுடைய லீலா விபூதியாகிய இவ்வுலகம் ஞானிகளால் இருள் தருமாஞாலமெனப்பட்டது. இருளைப் போக்குதற்குரிய அக்நி ஸூர்யன் சந்திரன் முதலிய தேஜஸ் பதார்த்தங்கள் பல பல இருக்கும் அவற்றால் போக்கவொண்ணாத அஜ்ஞாநாந்தகாரமே இங்கு இருள் எனப்பட்டது. அந்தவகைய இருளைப் போக்குவதற்கு "புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்த க்ஷயாயச-ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர:" என்றபடி எம்பெருமானாராகிற விலக்ஷண ஸூர்யன் இவ்வுலகில் திருவவதரித்து "கடலளவாய திசை யெட்டினுள்ளுங் கலியிருளே, மிடைதரு காலத்திராமாநுசன் - மிக்க நான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரை யுடையவன் நாரணனென்று அறிவாரில்லை யுற்றுணர்ந்தே." என்ற அமுதனாருளிச் செயலின்படியே மஹோபகாரம் செய்தருளும் படியாயிற்று. "தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனர் நீணிலத்தே, பொற்கற்பகம் எம்மிராமாநுசமுனி போந்த பின்னே," என்கிற படியே [illegible] பாஹ்யகுத்ருஷ்டிகளை யெல்லாம் தம் ஸூக்தி சரங்களாலே நிரஸித்தருளி, "வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆன்றதமிழ் மறைகளாயிரமும், ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னும்படியாக ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும் ப்ரவர்த்திப்பித் தருளி, திவ்ய தேசங்களையும் உத்தரிப்பித்து ஒருவாறு அவதார க்ருத்யத்தைத் தலைக்கட்டிக் கொண்டு சுடரொளிச் சோதிக்கு எழுந்தருளினபின், சிலகாலம் கடந்த பிறகு, அவ்வவதாரத்தில் [illegible] வேத பாஹ்யகுத்ருஷ்டிகள் தாமே மீண்டும் த்ராவிட வேத பாஹ்யகுத்ருஷ்டிகளாக ஜனித்து இவ்வுலகை நலிய, அந்த எம்பெருமானார் தாமே மீண்டும் வைகுந்தநாதனுடைய திருவாணையினால் இந்நிலவுலகில் திருவவதரித்து மணவாள மாமுனிகளென்கிற திருநாமத்துடனே விளங்கி, முன்னவதாரத்திற் செய்தருளின மஹோபகாரங்களிற் காட்டிலும் பன்மடங்கு அதிசயித்த சேமங்களைச் செய்தருளி இவ்விருள் தருமா ஞாலத்தைத் தெருள் தருமா ஞாலமாகத் திருத்திப் பணிகொண்டார். அவ்வாசார்ய சிகாமணியின் எண்ணில் பல் குணங்களைக் கூறுதற்கு அவர் தம்முடைய நிஜரூபமான ஆதிசேஷனும் அசக்தன் என்கிற இது அதிசயோக்தியன்று.

'பூர்வாசார்யர்' என்று இன்றைக்கும் நாம் வழங்கி வருமாறு பலபல மஹாசார்யர்களின் திருவவதாரத்தினால் புனிதமாய இவ்வுலகில், அவ்வாசாரிய பரம்பரை மணவாள மாமுனிகளோடு முடிவு பெற்றிருக்கின்றது. மாமுனிகளுக்குப் பிறகும் பல பல மஹான்கள் திருவவதரித்தாலும் 'பூர்வாசார்யர்கள்' என்கிற வ்யபதேசம் மாமுனிகளளவிலே விச்ராந்தமாயிருக்குமத்தனை. * "மதுரேண ஸமாபயேத்" என்பது ந்யாய மாதலால் மாதுர்யமே வடிவெடுத்த

மாமுனிகளோடு பூர்வாசார்ய பரம்பரையை எம்பெருமான் ஸமாபநம் செய்தது மிகப் பொருத்தம். மதுரம் என்கிற வடசொல்லானது, 'மகாரத்தை முன்னே யுடையது' என்னும் பொருளையு முடைத்தாதலால் மகாராதியான திருநாமமணிந்த மணவாள மாமுனிகளோடே ஸமாபநம் செய்தருளின பகவான் ஸுஸமர்த்தனே.

எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகச் செய்தருளின விபவாவதாரங்களுள் இராம பிரானாகத் திருவவதரித்த காலத்தில் பல பேர்களிடத்திலே தான் பணிவுகாட்டிப் போந்தான். விச்வாமித்ர முனிவன், ஸுக்ரீவ மஹாராஜர், ஸமுத்ரராஜன் என்றிப்படிப் பல வ்யக்திகளின் பக்கலிலே வணங்கி நின்றான். முதலில் விச்வாமித்ருடைய சரித்திரங்களையுணராமல் 'இவர் ஒரு மஹர்ஷி' என்கிற ப்ரதிபத்திமாத்ரமே கொண்டு *இமௌ ஸ்ம முநி சார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம்* என்று அவர்க்குச் சேவகனாய் நின்றான். பிறகு அஹல்யாசாபவிமோசனம் செய்தபின் சதாநந்தர் வாயிலாக அம்முனிவருடைய சரிதைகளை விரிவாகக் கேட்டபின் இங்ஙனே ராஜஸரும் தாமஸருமான இவரையோ நாம் ஆசார்யனாகக் கொள்ளப்பெற்றது! என்று திருவுள்ளக் குறையுற்றிருந்தான் போலும். பிறகு ஒரு கால் *ஸுக்ரீவம் சரணம் கத: * என்னும்படியாக ஒரு குரக்கினத் தரசன் காலிலே விழும்படியாயிற்று. அவன் திறத்து ப்ரீதியும் நிலைநின்றிருந்ததில்லை; இளையோனை யனுப்பி *மா வாலிபத மந்வகா: * இத்யாதிகளாலே நிக்ரஹ ப்ரகாசநம் செய்ய வேண்டியதாயிற்று. பிறகு *ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்து மர்ஹதி * என்ற விபீஷண வசனத்தின் படியே கடலரசன் பாடே சரணம்புகுந்து கிடந்தான். அங்கும் அப்ரீதியோடே தலைக்கட்டிற்று; * கோபமாஹாரயத் தீவ்ரம்—ஸாகரம் சோஷயிஷ்யாமி* இத்யாதிகள் காண்க.

பிறகு க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபனி பக்கலிலே சரணம் புகுந்து வித்யாக்ரஹணம் பண்ணினான்; அங்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி 'என்ன அபேக்ஷிதம்?' என்று அவரைக் கேட்டபோது *ஓதுவாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்கு முன்தந்த அந்தணனொருவன், காதலென் மகன் புகலிடம்காணேன் கண்டு நீ தருவாய் எனக்கென்று, கோதில் வாய்மையினான் உனை வேண்டிய குறை முடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்* என்னும்படியாக அந்த ஸாந்தீபனி என்றைக்கோ மறிகடல்வாய் மாண்டு போன தன் புதல்வனைக் கொணர்ந்து கொடுக்குமாறு வேண்டினார். இங்ஙனம் லௌகிகமான பலனை விரும்புகின்றவரை ஆசாரியனாகக் கொள்ளப் பெற்றோமே! யென்று அவரிடத்திலும் எம்பெருமானது நெஞ்சம் அப்ரீதி கொண்டிருந்தது போலும்.

ஆக; விபவாவதாரங்களில் தான் தலைமடுத்த விடமெல்லாம் தடுமாறிப் போகவே, பெருங்குறைவாளனான பகவான் அர்ச்சாவதாரத்திலாவது குறை தீர ஒரு ஸதாசார்ய ஸமாச்ரயணம் பெற்று வாழ்வோமென விரும்பி, *மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய வடிதிறல யோத்தி யெம்மரசாயும்* கோவலனாய் வெண்ணெயுண்டவாயனுமுள்ள அழகிய மணவாளனான திருக்கோலத்தில், ஆசார்யத்வ பூர்த்தியுள்ள மணவாள மாமுனிகள் பக்கலிலே சிஷ்யவ்ருத்தியை வஹித்து க்ருதார்த்தனானான். இத்தகைய ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்த மாமுனிகளின் வைபவம் ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கெல்லாம் ஜீவாதுவாகையாலே ஸாரஸங்க்ஷேபமாக இங்கு விஜ்ஞாபிக்கப்படுகிறது.

ப்ரவேசம் முற்றிற்று

---

## மாமுனிகளின் திருவவதாரம்

எம்பெருமானாருடைய திருவடிகளில் நூற்றுக்கணக்கான முதலிகள் ஆச்ரயித்திருந்தாலும் நம்முடைய ஓரான் வழியான குருபரம்பரையிலே எம்பெருமானார்க்கு அடுத்தபடியாக எம்பார் ஆசார்ய பதம் வஹித்தார். அவருடைய சிஷ்யர் (கூரத்தாழ்வான் திருக்குமாரரான) ஸ்ரீ பராசரபட்டர். அவருடைய சிஷ்யர் நஞ்சீயர். அவருடைய சிஷ்யர் நம்பிள்ளை. அவருடைய சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. அவருடைய சிஷ்யர் பிள்ளைலோகாசாரியர். அவருடைய சிஷ்யர் திருவாய்மொழிப்பிள்ளை. அவருடைய சிஷ்யர் மணவாள மாமுனிகள்—என்றிப்படி நம்முடைய குருபரம்பரையின் அடைவு உள்ளது.

தொல்லை வாதியர்களின் வாழ்வு அறவும், மறையவர் தம் தாழ்வு அறவும், தாரணி தவம் பெறவும், தத்துவ நூல்கள் கூழறவும், இந்நிலவுலகத்திலே திருவவதரிக்கத் திருவுள்ளம்பற்றிய திருவனந்தாழ்வான் நல்லார் நவில் குருகூரென்கிற ஆழ்வார் திருநகரியில் திருநாவீறுடைய பிரான் தாஸரண்ணர் என்கிற மஹாசார்யனை *பிதரம் ரோசயாமாஸ* என்கிற கணக்கிலே தந்தையாகவுகந்து அவருடைய திருக்குமாரராய் (கலியுகாதி நாலாயிரத்து நானூற்றெழுபத்திரண்டாவதான) ஸாதாரண வருடத்தில் ஐப்பசி மாதத்தில் திருமூல நக்ஷத்திரத்தில் அந்தத் திருநகரியில் திருவவதரித்தருளினன். அந்த நன்னாளின் சிறப்பை.

> " செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
> சீருலகாரியர்செய்தருள்நற்கலை தேசுபொலிந்திடுநாள்
> மந்தமதிப்புவிமானிடர்தங்களை வானிலுயர்த்திடுநாள்
> மாசறுஞானியர்சேரெதிராசர் தம் வாழ்வு முளைத்திடுநாள்
> கந்தமலர்ப்பொழில் சூழ்குருகாதிபன் கலைகள் விளங்கிடுநாள்
> காரமர்மேனியரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
> அந்தமில் சீர்மணவாள முனிப்பரனவதாரம் செய்திடுநாள்
> அழகுதிகழ்ந்திடுமைப்பசியில் திருமூலமதெனு நாளே."

என்று பாசுரமாகவும்.

*யந்மூலமாச்வயுஜமாஸி* யதவதரண மூலம்.

இத்யாதி ச்லோகங்களாகவும் பின்புள்ள முதலிகள் அநுஸந்தித்தார்கள்.

இங்ஙனே உலகுக்கெல்லாம் ஒருயிராகத் திருவவதரித்தருளின திவ்ய மூர்த்திக்கு ஸ்ரீரங்கநாதனுடைய திருநாமத்தைச் சாத்த விரும்பிய பெரியார் ' அழகிய மணவாளன் ' என்று திருப்பெயரிட்டனர். அழகிய மணவாள நாயனர் என்று சிறப்புத் திருநாமமாக வழங்கி வந்தது.

அந்நப்ராசந சௌளோபநயநாதிகளான வர்ணோசித ஸம்ஸ்காரங்களும் அடைவே நடைபெற்றன.

## வித்யாப்யாஸம்.

*நக்தோதக்வத்தவள மதுரம் சுத்த ஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த்ராவதாரம்* (வரவரமுநிசதகம்) என்கிறபடியே ஸாக்ஷாத் திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமாகிய இவர் *ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி* என்று ஆளவந்தாருளிச் செய்தபடியே ஞானக்கடலாயிருக்கச் செய்தேயும், ஸ்ரீ ராமக்ருஷ்ணாதிகளும் வஸிஷ்ட விச்வாமித்ர ஸாந்தீபநிப்ரப்ருதிகள் பக்கலிலே வித்யைகளை அதிகரித்தவாறாக லௌகிகப்ரக்ரியைக்கு

இணங்க வேதங்களையும் வேதாங்கங்களையும் மற்றுமுள்ள ஸகல சாஸ்த்ரங்களையும் திருத்தகப்பனுர் முதலானுர் திருவடி வாரத்திலே பணிந்திருந்து அதிகரித்து "சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவுந் தெரிந்தவன்" என்னும்படியாகவே விளங்கினர்.

உசித காலத்தில் க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்தருளி "மறந்திகழும் மனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்கள் அடக்கி இடர்ப்பாரத் துன்பந் துறந்து, இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்" என்ற ஸ்ரீ குலசேகரப் பெருமாளருளிச் செய்தபடியே ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணியாய் வாழ்ந்து போருகிறகாலத்திலே;

## ஆசார்ய ஆச்ரயணம்.

பின்னை லோகாசார்யர் திருவடிகளிலே நெடுநாள் பணிந்திருந்து ஸகல சாஸ்த்ர ரஹஸ்ய ஸாரார்த்தங்களனைத்தையும் அதிகரித்தவராயும், ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களிலே அப்ரதிமமான அபிநிவேசம் காரணமாகத் திருவாய்மொழிப்பிள்ளை யென்று நிரூபக நாமத்தைப் பெற்றவராயும் "நம: ஸ்ரீ சைலநாதாய குந்தீநகர ஜந்மநே, ப்ரஸாத லப்த பரமப்ராப்ய கைங்கர்ய சாலிநே" என்று நிச்சலும் மூவுலகும் தொழுதேத்த நிற்பவராயுமிரா நின்ற திருமலையாழ்வார் என்கிற மஹாசார்யர் இனி இந்த ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தை நிர்வஹிக்க வல்லவர் யாவர்? என்று சிந்தித்திருப்பாராய் அதிகாரியைத் தேடியிருக்கையில் யாத்ருச்சிகமாக இவர் அவர் திருவடிகளிலே சென்று தெண்டன் ஸமர்ப்பித்து, 'பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமை கொள்ளவேணும்' என்று ப்ரார்த்தித்து நிற்க, அவரும் இவருடைய அற்புதமான ஜ்ஞான பக்தி விரக்தி ஸம்பத் ஸம்ருத்தியைக் கண்டறிந்து அலப்ய லாபம் பெற்றதாக நினைத்து ஆனந்தக் கடலில் அமிழ்ந்து வாரிப்பணைத்து, இவரைத் தமக்கு மிகவும் அணுக்கராக அங்கீகரித்தருளி ஸதாசார்ய பரம்பராப்ராப்தமான ஸகல விசேஷார்த்த நிதியையும் பரமக்ருபையுடனே இவர்க்கு அநுக்ரஹித்தருளி, ஒருநாள் இங்ஙனே நியமிக்கலானுர்;

## ஆசார்ய நியமநம்.

வாரீர்! அழகிய மணவாளப் பெருமாளே! நீர் ஸர்வதோமுகமான ஜ்ஞானம் பெற்றிரா நின்றீர்; எம்பெருமானுரை அவதார புருஷரென்று சிக்கன அறிந்திருந்தும் பெரிய நம்பி, திருமாலையாண்டான் முதலானுர் அவர்க்கு ஆசார்யராக அமைய நேர்ந்தாப்போலே ஏதோ விதிவசமாக நானும் உமக்கு ஆசார்யனுக நின்றேன். என்னுடைய அஜ்ஞானுவர்த்தநம் உமக்கு அவர்ஜநீயம் என்பதை நான் விரித்துரைக்கவேண்டாவே; ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை முதலான நம் பூருவர்கள் ஸகல சாஸ்த்ர ப்ரவீணர்களாயிருக்கச் செய்தேயும் ஆழ்வார்களின் ஈரச் சொற்களின் அநுபவத்திலேயே பெரும்பாலும் ஊன்றியிருந்து அவற்றைப் ப்ரவசனஞ் செய்வதையே முக்ய கைங்கரியமாகக் கொண்டு வாழ்ந்தாரென்பது உமக்குத் தெரியாமையில்லை. "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதிகரித்து, போது போக்கும் அருளிச் செயலிலே யாம் நம்பிள்ளையைப் போலே" § என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருப்பது அறிவீரே. நீரும் அப்படியே நம் பூருவாசாரியர்களை அடியொற்றி அருளிச்செயல்களின் ப்ரவசனங்களிலே அதிமாத்ரம் நிஷ்ணுதராயிருக்கக்கடவீர். இந்த என்னுடைய கோரிக்கையை நீர் ஹ்ருதய பூர்வமாக அங்கீகரித்தீரென்பதை நானறிந்து கவலை தீர்ந்தேனும்படி செய்ய வேணும்" என்று நியமிக்க, உடனே அழகிய மணவாள நாயனுர் (மாமுனிகள்)

---

§ இந்த வாக்யம் பெரிய திருமொழியில் 6-3-7 * ஒருவாய்மையுமென்கிற பாசுரத்தின் வியாக்யானத்திலுள்ளது.

“ஸாப்ராப்தமானது தானே வைதமாகும் கடுகப் பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே” என்கிற பிள்ளை லோகாசார்யருடைய திவ்யஸூக்தியை ஸ்மரித்துப் பரமானந்தங்கொண்டு பால் குடிக்கக் கால் பிடிக்குமாபோலே இப்படியும் ஒரு சிறப்பர்த்தம் வேணுமோ? ஸ்வாமி திருவடிகள் ஸாக்ஷியாக இந்தக் கைங்கர்யத்தை அடியேன் சிரமேற்கொள்ளக் காத்திருக்கிறேன்; இதற்கு ஸர்வாத்மனா யோக்யதையற்ற அடியேனை யோக்யனாம்படி திருத்திப் பணிகொண்டருள வேணும்” என்று விண்ணப்பித்துத் திருவடிகளிலே வேரற்ற மரம்போல் விழுந்து கிடக்க; திருமலையாழ்வாரும் வாரிப் பிடித்தெடுத்துத் தழுவி “ஆமுதல்வனிவன்” என்று குளிரக் கடாக்ஷித்தருளி அன்று முதலாகத் தம் திருவடி வாரத்திலே நிழலும் $அடிதாறும் போலே இவரை வைத்துக் கொண்டிருந்து தம்முடைய சேமவைப்பான ஸகலார்த்த விசேஷங்களையும் க்ரமேண அநுக்ரஹித்தருளினர். நாயனாரும் க்ருதார்த்தராய்

“அன்னையுமத்தனுமாசாரியனுமனைத் துறவும்
மன்னியபேறுமுபாயமுந் தெய்வமும்மற்றுமெலாம்
என்னையளித்ததிருவாய்மொழிப்பிள்ளை யென்றுநெஞ்சே!
உன்னியுவந்துதிகழ்ந்து சதிர்த்தினியுய்ந்திடவே”

என்று அநுஸந்தித்து அவரையன்றி வேறொரு தெய்வமறியாதே அவருடைய திருவடிகளில் அந்தரங்க சேவையும் அவருடைய ஆஜ்ஞாபரிபாலனமுமே போது போக்காக இருந்துவந்தார்.

## நாயனார் யதீந்த்ரப்ரவணரென்கிற திருநாமம் பெறுதல்

திருவாய்மொழிப்பிள்ளை ஒருநாள் எம்பெருமானாருடைய குணாநுபவம் பண்ணிக்கொண்டிருக்கையில் “மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன்” என்றும், “உறுபெருஞ் செல்வமும் தந்தையும் தாயும் உயர் குருவும் வெறிதரு பூமகள் நாதனும், மாறன் விளங்கியசீர் நெறிதருஞ் செந்தமிழாரணமேயென்று இந்நீணிலத்தோர் அறிதர நின்ற விராமானுசன்” என்றும் ‘பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனிவேழம்’ என்றுமுள்ள பாசுரங்களைச் சிந்தைசெய்து, ஆழ்வார் திருவடிகளிலும் அருளிச்செயல் திறத்திலும் எம்பெருமானார்க்கு ப்ரஸித்தமாயிருந்த அதிமாத்ர ப்ராவண்யத்திற்குத் தகுதியாக இத்திருநகரியிலே அவர்க்கொரு தனிக்கோயில் அமைக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி சிஷ்யர்களுக்கு நியமித்து உடையவர் ஸந்நிதியையும் அதைச்சுற்றி ஸ்ரீராமாநுஜ சதுர்வேதி மங்கலம் என்கிற திருவீதியையும் ப்ரதிஷ்டிப்பித்து ‘இராமானுசனைத் தொழும் பெரியோரையும் அங்கே நித்யவாஸம் செய்ய நியமித்தருளி அந்த நற்செல்வமனைத்தையும் நாயனார்க்கு அதீனமாக்கியருளினர். நாயனாரும் அந்த உடையவர் திருவடிகளிலே மிகவும் பரிவராயிருந்து அங்குத்தைக்கு உரிய கைங்கர்யங்களை யெல்லாம் குறையற நடத்திக்கொண்டு போருமதுகண்டு திருவுள்ளமுவந்த திருவாய்மொழிப்பிள்ளை “யதீந்த்ரப்ரவணர்” என்று நாயனாரை அழைக்கத் தொடங்கினர். இந்தத் திருநாமமே அப்போது எங்கும் ப்ரஸித்தமாயிற்று.

## யதிராஜவிம்சதி அருளிச்செய்தல்.

அந்த உடையவர் திருவடிகளிலே ஒரு ஸ்தோத்ரம் விஜ்ஞாபிக்க வேணுமென்று ஆசார்ய நியமனமாக, யதிராஜ விம்சதி யென்னும் ஸ்தோத்திரத்தை யதீந்த்ரப்ரவணர் விஜ்ஞாபித்து, அதில் [*ஸ்ரீமத் யதீந்த்ர தவ திவ்ய பதாப்ஜ ஸேவாம்] என்கிற ச்லோகத்திலே ஸ்வாசார்ய

---

$ அடிதாறு - பாதரேகை.

விஷயத்தில் உபகார ஸ்ம்ருதியையும் ப்ரகாசிப்பித்தருளினார். அப்போது அருகேயிருந்த முதலிகள்,

" வல்லார்கள்வாழ்த்துங்குருகேசர் தம்மை மனத்துவைத்துச்
சொல்லாரவாழ்த்தும் மணவாளநாயனர் தொண்டர்குழாம்
எல்லாந்தழைக்க எதிராசவிம்சதியின்றளித்தோன்
புல்லாரவிந்தத்திருத்தாளிரண்டையும் போற்றுநெஞ்சே"

என்கிற பாசுரத்தை விஞ்ஞாபித்தனர்.

இந்த யதிராஜவிம்சதியின் மாதுர்யம் முதலிய குண விசேஷங்களைப் பற்றி அண்ணா வரவரமுனிசதகத்தில் அருளிச்செய்துள்ள ச்லோகங்கள் இங்கே அநுஸந்தேயம். எம்பெருமானாருடைய அபராவதார பூதரான மாமுனிகள் தம்மைத்தாமே துதிப்பதுபோலே இந்த ஸ்தோத்ரம் அருளிச் செய்யலாமோ? அதிலும் அளவுகடந்தவராகத் தம்முடைய நைச்யத்தைப் பேசியிருக்கிறாரே, இது கூடுமோ? என்று சிலர் சங்கிப்பர்கள். "வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே" என்கிறபடியே ஸ்ரீராமபிரான் ஸாக்ஷாத் நாராயணாவதாரமாயிருக்கச்செய்தேயும் "ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" இத்யாதிப்படியே நாராயணனைத் தொழுதது, ஸ்ரீரங்கநாதனைத் திருவாராதனஞ் செய்துகொண்டிருந்தது முதலியனபோல் இவையும் அவதாரங்களுக்குப் பொருந்தியவைகளே என்று பெரியோர் கூறுவர்.

## நாயனார்க்குத் திருக்குமாரர் திருவவதரித்தல்.

அழகிய மணவாள நாயனார் இங்ஙனே ஆசார்ய பரதந்த்ரராய் வாழ்ந்தருளாநிற்க, க்ஷீரார்ணவத்தில் சந்திரன் போலே ஒரு திருக்குமாரர் திருவவதரித்தார். அவர்க்கு இராமாநுசப்பிள்ளை என்று திருநாமமிடும்படி ஆசார்ய நியமனத்தை யடிபொற்றி நாயனார் நியமித்தருளினார்.

## திருவாய்மொழிப்பிள்ளை திருநாடலங்கரித்தல்.

அப்ரதிமஶிஷ்ய ஸம்பத்தோடே வாழ்ந்தருளாநின்ற திருவாய்மொழிப்பிள்ளை திருமேனி தளர்ந்து திருநாட்டுக் கெழுந்தருளுகையிலே விருப்பமுடையராய்,

" உத்தமனேயுலகாரியனே! மற்றொப்பாரையில்லா
வித்தகனே நல்லவேதியனே! வண்முடும்பைமன்னு
சுத்தகன்ஞானியர் நற்றுணையே சுத்தசத்துவனே!
எத்தனைகாலமிருந்துழல்வே னிவ்வுடம்புகொண்டே."

என்று அநுஸந்தித்துக் கொண்டிருக்க, ஒருநாள் கனவிலே பிள்ளைலோகாசாரியர் ஸேவை ஸாதித்தருளி "நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" என்று பணிக்க, பின்னையும் தேறி யெழுந்து நித்ய கர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு முதலிகளெல்லாரையும் வரவழைத்து "இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே" "வானேற வழிதந்த வாட்டாற்றான் பணிவகையே, நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகுநெஞ்சே!" என்ற பாசுரங்களைப் பரக்க வ்யாக்யானித்தருளி, "முதலிகாள்! இன்று எம்பெருமான் நம்மை ஆசாரியன் திருவடிவாரத்திற்கு அழைத்துக் கொள்வதாகத் திருவுள்ளம் பற்றியிரா நின்றான்; இனி நீங்களெல்லாரும் நம் அழகிய மணவாள நாயனாரை (மாமுனிகளை) ஸாமாந்யமாக ப்ரதிபத்தி பண்ணியிராமல் நம்மிராமாநுசனுடைய அபராவதாரமே யிவர் என்று ப்ரதிபத்தி பண்ணி இவருடைய

படியே தேவரீருடைய அருளிச்செயல்களுக்குப்ரதாநப்ரமேயபூதரான பெரியபெருமாளுடைய திருவடிவாரத்திலே வாழ்வது அடியேனுக்கும் ருசித்திருக்கையாலும் அங்கே சென்று வர்த்திக்க நியமநம் தந்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் 'செங்கயல்பாய் நீர்த்திருவரங்கத்தே சென்று முகில்வண்ணனடியை யடைந்து அருள்சூடியுய்யக் கடவீர்' என்று அநுக்ரஹித்து நியமனம் தந்தருளினர்.

## நாயனார் ஸ்ரீரங்கயாத்திரை புறப்படுதல்.

ஆழ்வாருடைய அருள்பொலிந்த நியமனம் பெற்ற நாயனார் 'தென்னரங்கர் சீருக்கு இலக்காகப் பெற்றோம்' என்று திருவுள்ளம் பூரித்து முதலிகளும் தாமுமாகப் புறப்பட்டருளி * மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர் உறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினால் அங்கே யெழுந்தருளி வடபெருங்கோயிலுடையானையும் பெரியாழ்வாரையும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியையும் ஸேவித்து, அங்குள்ளாருடைய வேண்டுகோளுக்கிரங்கிச் சிலநாள் அங்கே யெழுந்தருளியிருந்து, அடிபணிந்த அன்பர்கட்கு நல்வார்த்தைகள் பலவுமருளிச்செய்து அங்கு நின்றும் புறப்பட்டு * மாலிருஞ்சோலை மேயமைந்தனை வணங்கத் திருவுள்ளமாய் அங்கே எழுந்தருளி * சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடுஞ் சீர்ச்சிலம்பாற்றிலே நீராடி அழகரை மங்களாசாஸனஞ் செய்து அங்கு ஆழ்வான் எழுந்தருளியிருந்த விடத்திலேயிருந்து ஸ்ரீஸுந்தரபாஹுஸ்தவத்தின் ஆழ் பொருள்களை அடியவர்க்கு உபதேசித்தருளி, அங்கு நின்றும் புறப்பட்டு "வன்பெருவானகமுய்ய அமருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய, துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம்வளர அகமகிழுந் தொண்டர்வாழ, அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளி கொள்ளுமணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள், இன்பமிகுபெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனேயென்று கொலோ இருக்குநாளே" என்று இது முதலான பல பாசுரங்களையும், * கநாறும் காவேரி நடப்பிலரே * என்பது முதலான ஸ்ரீஸூக்திகளையும் இனிமையாக அநுஸந்தித்துக் கொண்டே யெழுந்தருளிப் பயணத்திலே, * எண்டிசைக் கணங்களு மிறைஞ்சியாடு தீர்த்த நீர் வண்டிரைத்த சோலை வேலிமன்னு சீரரங்கந்தன்னில் * கங்கையிற் புனிதமாய காவிரியையும் " வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல் மீதணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை அண்டர்கோனமருஞ்சோலையையும் அநுபவி * தென் திருவரங்கம் கோயில் கொண்ட தெய்வ சிகாமணியின் திருவடிவாரஞ் சேரப்பெற்றோமென்று திருவுள்ளமுவந்து நித்ய கர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு,

" மாடமாளிகைசூழ் திருவீதியும்
மன்னுசேர் திரிவிக்ரமன் வீதியும்
ஆடல்மாறனகளங்கன் வீதியும்
ஆலிநாடனமர்ந்துறை வீதியும்
கூடல்வாழ் குலசேகரன் வீதியும்
குலவுராசமகேந்திரன் வீதியும்
தேடுதன்மவன்மாவவன் வீதியும்
தென்னரங்கர் திருவாவரணமே "

என்று சொல்லப்படுகிற திருவீதிகளை யெல்லாம் கண்ணாரக் கண்டு களித்துக்கொண்டு உள்ளே யெழுந்தருளினர்.

## நாயனார் திவ்யதேச யாத்திரை யெழுந்தருளல்.

இங்ஙனே சிலநாள் சென்றவாறே, சோழநாடு நடுநாடு தொண்டை நாடுகளிலுள்ள திருப்பதிகளெல்லாவற்றையும் ஸேவிக்கத் திருவுள்ளம்பற்றின நாயனார் பெரியபெருமாள் பாடே சென்று நியமனம் பெற்றுக்கொண்டு சிஷ்யவர்க்கங்களுடனே புறப்பட்டருளினார். வழியடைவிலே ஸகல திவ்ய தேசங்களையும் ஸேவித்துக்கொண்டு வருமளவிலே திருமலையில் திருவேங்கடமுடையானுக்குப் புரட்டாசித் திருநாள் அணித்தென்றறிந்து அங்கே யெழுந்தருளித் திருமலையப்பனுடைய ஒப்புயர்வற்ற ஸத்காரங்களையும் லபித்து அங்கு நின்றும் புறப்பட்டுப் பெருமாள் கோயிலுக்கெழுந்தருளினார்.

## பேரருளாளன் மங்களாசாஸநம்.

பிறகு பெருமாள் கோயிலிலுள்ள ஸகல திவ்யதேசங்களையும் அடைவே ஸேவித்து, பெருந்தேவி மணவாளனான பேரருளாளனது வடிவழகில் மிகவு மீடுபட்டு ஸ்ரீ தேவராஜ மங்களம் என்கிற மங்கள ஸ்துதியை அடியவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி அருளிச் செய்தார். அன்றியும், பெருமாள் கோயிலிலுள்ள ஸகல திவ்யதேசத் தெம்பெருமான்களையும் சேர அநுஸந்தித்து இரண்டு ச்லோகமருளிச் செய்ததாகவும் பெரியோர் வழங்குவர்.

## நாயனார் ஸ்ரீபாஷ்யமதிகரித்தல்.

ஸ்வாமி தாம் அவதார விசேஷ ப்ரயுக்தமான ஸர்வஜ்ஞத்வ பூர்த்தியை யுடையவரா யிருக்கச் செய்தேயும், இந் நிலவுலகின் கட்டளைக் கிணங்கவும், ஸ்வாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் நியமனத்திற்குச் சேரவும் ஓர் ஆசார்ய ஸகாசத்திலே ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிக்கத் திருவுள்ளம் பற்றி, அப்போது பெருமாள் கோயிலில் எழுந்தருளி யிருந்தவரும் ஸத்ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகருமான கிடாம்பி நாயனார் என்கிற ஸ்வாமியின் ஸந்நிதியிலே [முந்தின அவதாரத்திலே தாமே அருளிச் செய்ததான] ஸ்ரீ பாஷ்யத்தை ஸேவிக்க எம்பெருமானாருடைய நியமனம் பெற விரும்பி, ஒரு திருநன்னாளில் ஸ்ரீபெரும்பூதூர்க்கு எழுந்தருளினார். அங்கே விடுதியாகப் பல பாசுரங்கள் அருளிச் செய்ததாயுண்டு; அவற்றுள் சில வருமாறு :—

“ இதுவோ பெரும்பூதூர் இங்கே பிறந்தோ
எதிராச ரெம்மிடரைத் தீர்த்தார்—இதுவோதான்
தேங்கும் பொருநல் திருநகரிக் கொப்பான
ஓங்கு புகழுடைய வூர்.”

“ எந்தை யெதிராசர் எம்மை யெடுத்தளிக்க
வந்த பெரும்பூதூரில் வந்தோமோ—சிந்தை
மருளோ தெருளோ மகிழ்மாலை மார்வ
னருளோ விப்பேற்றுக் கடி.”

இத்யாதிகள்.

அங்கே எம்பெருமானாரைத் திருவடி தொழுது விடைபெற்று மீண்டும் கச்சிப்பதியே யெழுந்தருளிக் கிடாம்பி நாயனார் பக்கல் ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்துத் தலைக்கட்டின வளவிலே, சில மஹான்கள் ஸ்வாமி திருவடிகளிலே ஸ்ரீ பாஷ்யம் ஸேவிக்க விருப்பங்கொண்டு மிகவும் ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் திருவுள்ளமுகந்தருளி ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸந்நிதி

யிலே ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனம் செய்தருளினர். [இது பற்றியே திருவெள்ளறையில் மணவாள மாமுனிகள் வியாக்யான முத்திரையோடு ஸேவை ஸாதித்தருளும்படியென்று பெரியோர் பணிப்பது]

## நாயனாருடைய ஸகல சாஸ்த்ர பாரங்கதத்வம்.

ஸ்வாமி தாம் ஸ்ரீ பாஷ்யம் அதிகரித்த காலத்திலும் சிஷ்யர்களுக்கு அதை ப்ரவசனம் செய்த அன்றும் காலத்திலும் தம்முடைய ஸர்வாதிசயமான ஸகல சாஸ்த்ர பாரங்கதத்வத்தைப் பல முகமாக ப்ரகாசிப்பித்தருளினர். தர்க்க மீமாம்ஸாதிகளில் பாண்டித்யம் பெற்றவர்கள் மற்றும் பல ஆசிரியர்கள் வெளியிட்டுள்ள க்ரந்தங்களிலிருந்து பாண்டித்ய ப்ராசுர்யம் பரம விலக்ஷணமென்பது ஸ்வாமி இட்டருளிய வியாக்யானங்களில் அதைக் கற்றோரும் அறியும்படியாக விளங்கும். ஒவ்வொரு ஸ்ரீஸூக்தியும் சாஸ்த்ரார்த்த ஸாரமே வடிவெடுத்த தென்னலாம்படியும், "அம்பரமே தண்ணீரே சோறேயறஞ் செய்யும்" என்கிற இடத்திற்கு வ்யாக்யானஞ் செய்தருளுகிற காலத்திலே "இதுவும் நன்றேயோ இவர் கற்றது: இதுவும் நன்றேயோ இவர் கற்றது!" என்று வியக்கும்படியும் அமைந்திருக்கையாலே இவருடைய ஸர்வதோமுகமான பாண்டித்யம் வேறொன்றும் காட்டவேண்டாததொன்று. "செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்" என்கிற திருமங்கையாழ்வாரருளிச் செயலுக்கு முக்கிய இலக்காக விளங்கினவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் இந்த மஹத்தி விசேஷ பொலிந்த தென்னத் தட்டில்லை.

## நாயனார் கோயில் சென்று சேர்தல்.

இங்ஙனம் கச்சிப்பதியிலே ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து அடியார்களை வாழ்வித்தருளி மீண்டும் திருவரங்கம் பெரிய கோயிலில் சென்று சேர்ந்த நாயனார், அவ்விடத்திலே "பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற எம்பெருமானை செங்கோலுடைய திருவரங்கச்செல்வனுடைய விசேஷ கடாக்ஷத்திற்கு இலக்காகி "வண்பெரு வானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந் தொண்டர் வாழ" அர்த்த விசேஷங்களை அடியவர்களுக்கு அநுக்ரஹித்தருளாநின்றுகொண்டு "இருப்பொழுதேத்தி வெவ்வினையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்." என்கிற ப்ரபந்நதை விபூதிநாசப் லீலா விபூதியை நித்ய விபூதியாக்கிக்கொண்டு விளங்கி வந்தார்.

## நாயனார் ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளல்.

அக்காலத்தில், ஸ்வாமிக்கு ஜ்ஞாதிகள் பலரிருந்தமையால் அடிக்கடி ஆசௌச ப்ரஸங்கம் சேர்ந்து த்ரிகால ஸேவைக்கும் பெருமாளுடைய மங்களாசாஸனத்திற்கும் இடையூறு விளைந்துவந்ததைக் கண்டு க்ருஹஸ்தாச்ரமத்திலே வெறுப்புண்டாகி உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்தருளத் திருவுள்ளமாய், அப்போது கோயிலிலே ஸ்ரீ சடகோப ஜீயரென்று ப்ரஸித்தராய் ஜ்ஞானமநுஷ்டான மிவை நன்றுடையராயிருந்த மஹநீயர் பக்கலிலே துரீயாச்ரமம் ஸ்வீகரித்து நம்பெருமாளை மங்களாசாஸனம் செய்யச் சென்று நின்றவளவிலே, பெருமாளும் இவரை ஆதரித்தருளித் தம்முடைய திருநாமத்தையே இவர்க்கு ப்ரஸாதித்தருளி [அழகிய மணவாளமாமுனிகள் என்றிட்டு] ஸகல மரியாதைகளையும் செய்வித்து "யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று எம்பெருமானார்க்குப் போலே நியமனம் தந்தருளி, பல்லவராயன் மடத்தையும் ஸ்வாமிக்குப் பரிசாக ப்ரஸாதித்து அனைத்துக் கொத்துப் பரிகரங்களுடனே போகவிட்டருள, அழகிய மணவாள மாமுனிகளான நாயனார் பெரு

மானுடைய திருவருள் நிரம்பிய நியமனத்தைச் சிரஸா வஹித்து மடமேற எழுந்தருளி அழகிய மணவாளனுடைய அருட்பெருக்குக்கு அதிமாத்ரம் உகந்து போந்தார். அக்காலத்திலே மாமுனிகளின் அப்ரதிமவைபவம் தேசமெல்லாம் பரந்து திகழ, உலகம் நிறைந்த புகழாளரான மாமுனிகளின் திருவடிவாரத்திலே பலதிசைகளில் நின்றும் பலர் வந்து ஆச்ரயித்து, ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான பூருவாசாரியர்களை ஸேவிக்கப்பெறாத குறைதீர அவ்வாசிரியர்களனைவரும் இங்ஙனே ஒரு திருக்கோலமாக வடிவெடுத்து ஸேவை தந்தருள்வதாக அறுதியிட்டு க்ருதார்த்தர்களாய் வாழ்ந்து வந்தார்கள்.

## திருமலையாழ்வார் திருமண்டபம் அமைத்தல்.

மாமுனிகள், தம்முடைய மடத்தில் ஒரு பகுதியை ஸ்வாசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் திருநாமத்தினால் காலக்ஷேப கூடமாக அமைத்தருளி, அதில், "முன்னவராம் நம் குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோர்" என்று (ஆர்த்தியில்) தாமே அருளிச்செய்தபடி பூர்வாசார்ய திவ்ய ஸ்ரீஸூக்திகளை சிஷ்யர்களுக்கு ப்ரவசனம் செய்தருளி வந்தார். "அத ஸ்ரீசைலநாதார்ய நாம்நி ஸ்ரீமதி மண்டபே" என்று தொடங்கி எறும்பியப்பாவாலும் திநசர்யையில் இது அநுஸந்திக்கப்பட்டது.

இங்ஙனம் திருவாய்மொழிப் பிள்ளை திருநாமத்தாலே திருமலையாழ்வார் என்று அமைந்த திருமண்டபத்திலே, பின்பு ஆசார்யர் திருமாளிகையில் நின்றும் "ரஹஸ்யம் விளைந்த மண்" என்று விலக்ஷணமான சிறப்புப் பெற்ற திருமண்ணைக் கொணர்ந்து காலக்ஷேப ஸ்தலத்திற்குச் சாப்பிடுவித்து அதனையே தமக்கு குருகுல வாஸமாகவே எண்ணி எழுந்தருளி யிருந்து முமுக்ஷுக்களுக்கு அருமறைப் பொருள்களை அடிபணிந்தவர்களுக்கு அருளிச் செய்யா நின்று கொண்டு எண்டிசையும் புகழும்படி வாழ்ந்து வந்தார்.

## பட்டர்பிரான் ஜீயர் வந்து ஆச்ரயித்தல்.

இப்படி நடந்து போருங்காலத்திலே 'கோவிந்த தாஸரப்பன்' என்று திருநாமமுடைய பட்டர்பிரான் ஜீயர் வந்து மாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயித்து எம்பெருமானார் திறத்தில் எம்பார்போலே இறையுமகலகில்லாதே பாதச் சாயை போலே யிருந்து பிரியாவடிமை செய்து வந்தார். அடியார்கட்குச் சேமவைப்பாக மாமுனிகள் அருளிச் செய்யும் அர்த்த விசேஷங்கள் அனைத்துலகும் பரவ, நாடோறும் பலபல மஹான்கள் வந்து திருவடி ஸம்பந்தம் பெற்று, உபய விபூதியிலும் ஒத்தாரும் மிக்காருமில்லாத மஹாசார்யர் இவரொருவரே யென்று அறுதியிட்டு அநுஸந்தித்துப் போந்தார்கள்.

## கோவில் கந்தாடையண்ணன் ஆச்ரயித்தல்.

கோயிலில் ஆசார்ய புருஷர்களில் ஒருவராக விளங்கி நின்ற கந்தாடையப்பண்ணனும் மாமுனிகளின் திருவடி ஸம்பந்தமே நமக்கு ஸர்வஸ்வம் என்று நிச்சயித்துப் பெரிய பெருமாளுடைய நியமனத்தையும் பெற்று பரிகரராய் வந்து "காதம்பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீருமில்லை, உன்பாத நிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குமே காண்கின்றிலேன்" என்று அநுஸந்தித்துத் திருவடிகளிலே வேரற்ற மரம் போலே விழுந்து மாமுனிகளின் பரிபூர்ணமான திருவருளைப் பெற்று, அந்நாள் தொடங்கி அவரது திருவடிகளையே பழுக்க ஸேவித்துக் கொண்டு அவருக்கு அந்தரங்கராயிருந்தார்.

## வேடலப்பையை வரவழைத்தல்.

இப்படியிருக்கையில், மாயாவாதியான ஒரு பண்டிதன் படைவீட்டில் நின்றும் அங்கு வந்து, அவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியையும் மாமுனிகளின் மஹிமையையும் கண்டு பொறுக்க மாட்டாத அஸூயாவேசத்தாலே செருக்குமிக்கு அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களை அதிக்ஷேபித்துக் கொண்டு 'ஸம்வாதத்தில் என்னை வென்று ஸித்தாந்தத்தை நிலை நிறுத்திக் கொள்வீர்' என்று சொல்லி ஒரு ஆளவனை மாமுனிகள் பக்கலில் வரவிட்டான். அந்த மாயாவாதியானவன் முன்பு 'வேடல் அப்பை' என்னும் ஸ்வாமியின் சிஷ்யனாய் வைஷ்ணவசாஸ்த்ரஞனாயிருந்து அஹங்கார தோஷத்தாலே கெட்டு மாயிமதத்திற் புகுந்தவனாகையால் அநுபாதிகனான அவன் முன்னே போய் நிற்கவும், திவ்யஸூக்தி ஸாரஸ்வதத்தை விட்டுக் கருவிலே திருவிலாத அவனோடே வாது செய்யவும் விரும்பாத மாமுனிகள் வாதுசலபக்ஷத்தராசன அந்த வேடலப்பையைக் கொண்டே அவன் செருக்கை அடக்கத் திருவுள்ளம்பற்றி வேடலில் நின்றும் அவரை வரவழைத்து வாதயுத்தத்திற்குப் போகவிட, இங்ஙனே தனது ஆசாரியரே வாதம் நிகழ்த்த வந்து விட்டாரென்றறிந்த அந்த மாயாவாதி கருடனைக் கண்ட பாம்பு போல அஞ்சி நடுங்கி வணங்கி வழிபட்டுப் போயினன்.

பிறகு மாமுனிகள் வேடலப்பையை அங்கீகரித்து 'இங்கே நமக்கு உசாத்துணையாக இரும்' என்று நியமித்தருளினர். அருளிச்செயலமுத பானத்திலே அநவரதம் ஆழ்ந்து *தேவுமற்றறியேன் குருகூர் நம்பி பாவின்னிசை பாடித் திரிவனே* என்ற மதுரகவிகளின் நிலையிலே நின்று *மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோமென்றிருக்கும் மாமுனிகளுக்கு அம்ருதபான விரோதிகளாக நேரும் மாயமதவாதிகளை அகற்றவும் மேலும் தர்க்க நிர்வாஹம் செய்து கொண்டே போகவும் வல்லவரான ஒருவரைத் தம்முடைய ஸந்நிதியிலே வைத்துக்கொண்டு பழக்க வேணுமென்னும் அவா அதிகரித்திருந்தமையாலே அப்பையைக் கடாக்ஷித்து இங்ஙனே நியமிக்கலாயிற்று. அவர் ஸ்வக்ராமவாஸத்தை விட்டுக் கோயில் வாஸத்திலே ருசிபெறவொட்டாத ப்ரக்ருதிபந்தத்தாலே மந்தராய் 'அடியேனுக்கு விடை தந்தருள வேணும்' என்று நியமனம் பெற்றுக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தார்.

## பிரதிவாதிபயங்கரம் * அண்ணனைத் திருவுள்ளம் பற்றுதல்.

மாமுனிகள் தம்முடைய மநோரதம் நிறைவேறப் பெறாமையாலே 'இனி இதற்கு ஆவாரார்?' என்று விசாரியா நிற்கையில், பிரதிவாதிபயங்கரம் அண்ணனைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவர் மஹாஸமர்த்தராய் ஆத்மகுண ஸம்பந்நராய்த் திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு வழுவிலாவடிமை செய்துகொண்டு ஸகுடும்பமாக எழுந்தருளியிருக்கிறாரென்னும் உணர்ந்தருளி 'ஆம் முதல்வனிவன்' என்று திருவுள்ளத்திலே வைக்கக் கடாக்ஷித்து அவரைக் கோயிலுக்கு அழைத்து வருமாறு இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களை ஸ்ரீமுகத்துடன் திருமலைக்குப் போகவிட்டார்.

## பிரதிவாதிபயங்கரம் அண்ணனுடைய செய்தி.

ஸ்ரீ காஞ்சிபுரியில் நயனவரதாசார்யஸ்வாமி பக்கலிலே ஆச்ரயித்து வேதாந்த ச்ரவணம் பண்ணி 'ப்ரதிவாதி பயங்கரர்' என்கிற விருதையும் பெற்று விக்யாதராய் விளங்கி நின்ற அண்ணன், சிலகாலம் திருவேங்கடமலையில் வாழ்ந்து அப்பனுக்குத் தொண்டுபூண்டு

* இவர்க்கு அண்ணன் என்கிற திருநாமமாவது ஏற்கெனவே ஆச்ரயித்திருந்த கோயிலண்ணனைக் காட்டில் இவர்க்குத் திருநாமம் சேர்த்து 'அண்ணா' என்று வ்யவஹரித்து வந்தார்கள். அது பற்றியே 'ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா' என்கிற வழக்கும் ஸம்ப்ரதாயம்.

அமுதருமென்ன வேணுமென்று கருதி அங்கே சென்று நாடோறும் ஆகாச கங்கையிலிருந்து திருவாராதனத்துக்கும் திருமஞ்சனத்துக்கும் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பிக்கிற கைங்கர்யத்தில் ஊன்றியிருந்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் கோயிலில் நின்றும் மணவாள மாமுனிகளின் திருவடி ஸம்பந்தியானவொரு பரமபாகவதர் திருமலைக்கு எழுந்தருள அண்ணன் அவரை மிகவும் உபசரித்துப் பெருமாள் ஸேவை முதலானதுகளைப் பண்ணி வைத்துத் தமது திருமாளிகையிலே விருத்தி வார்த்தைகள் சொல்லிக் கொண்டிருக்கையில், அவர் மணவாள மாமுனிகளின் வைபவ விசேஷங்களை எடுத்துரைக்க அவற்றைச் செவிமடுத்த அண்ணன் பரம பக்தியுக்தராய், 'இன்னுஞ் சொல்லாய் சீரானே!' என்று மேன் மேலும் அந்த திவ்ய வைபவங்களைச் சொல்லுமாறு வேண்டி அவருடனே ஸல்லாபங்கள் செய்து கொண்டே மறுநாள் காலையில் ஆகாச கங்கைக்கு நித்யம் போல் எழுந்தருளி நித்யாநுஷ்டானங்களை நிறைவேற்றித் திருவேங்கடமுடையான் திருவாராதனத்துக்காகத் தீர்த்தத்தைக் கும்பத்தில் பூரித்தெடுத்துக்கொண்டு திருமாளிகைக்கெழுந்தருளி மணவாள மாமுனிகளின் வைபவச்ரவணத்தில் பரவச ஹ்ருதயராய்த் திருமஞ்சன கைங்கர்யத்தில் த்வரையின்றிக்கே ஸாவகாசராய் இருந்து கொண்டு பரிமள த்ரவ்யங்களால் தீர்த்தத்தை ஸம்ஸ்கரிக்க யத்னித்துக் கொண்டிருக்கையில் திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் நின்றும் அர்ச்சகர் தாமே விரைந்தோடி வந்து "திருவாராதன காலம் கடந்ததும் தெரியாமே இப்படி அஸாவதானராய் விளம்பித்திருப்பது நன்றாயிருக்கிறது! தீர்த்தக் குடத்தை இப்படிக் கொடும்" என்று நிஷ்டுரமாகப் பேசி அந்தத் தீர்த்த கும்பத்தைப் பரிமள ஸம்ஸ்காரமின்றியே பலாத்காரமாக வாங்கி யெடுத்துக் கொண்டு சடக்கெனக் கோயிலுக்குப் போய்விட்டார்.

அநவதானத்தால் இன்று இப்படி அபசாரப்பட நேர்ந்ததே! என்று அண்ணன் அநுதபித்துக் கொண்டே பரிமள த்ரவ்யங்களை யெடுத்துக் கொண்டு மிகவும் விரைந்து ஸந்நிதிக்கு எழுந்தருள்வதற்குள்ளே திருவாராதனம் உபக்ரமித்து நடந்து கொண்டிருப்பதறிந்து அஞ்சி நடுங்கி விஷாதத்துடனே உள்ளே சென்று அந்தப் பரிமள த்ரவ்யங்களை அர்ச்சகரிடத்தில் கொடுத்துவிட்டு வெள்கி வெளியே நிற்கையில், அநுதப்தராயிருக்குமிவரைத் தேற்றுவிக்கத் திருவுள்ளங்கொண்ட திருவேங்கடமுடையான் 'வாரீர் அண்ணனே! இன்று நீர் கொணர்ந்த தீர்த்தம் பரம போக்யமாயிரா நின்றது; இத்தனை நாளும் போலன்றிக்கே இன்றைத் தீர்த்தத்தில் ருசியும் பரிமளமும் விலக்ஷணமாயிரா நின்றது காணும்; உம்முடைய சிறந்த பக்திக்கு நாம் உகந்திருக்க, இங்ஙனே நீர் வருந்தக் கடவீரல்லீர்' என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்ய, அந்த திவ்ய ஸூக்தியைக் கேட்டவாறே அண்ணன் பரம விஸ்மிதராய், 'பரிமளத்ரவ்யமொன்றும் சேராதிருக்கவும் இன்று திருமலையான் இங்ஙனே திருவுள்ளமுகந்து அருளிச் செய்யக் காரணமென்னோ!' என்று விமர்சித்து மணவாள மாமுனிகளுடைய வைபவங்களைச் செவியேற்றுக்கொண்டே இன்று இந்தத்தீர்த்தம் பூரித்தோமாகையால் அந்தவுத்தமாசார்யவைபவச்ரவணமே இத்தனை அதிசயத்துக்கு அடியாக வேணுமென்று அறுதியிட்டு அது முதலாகவே மாமுனிகளை விரைவில் ஸேவிக்கப்பெற வேணுமென்று குதூஹலம் அதிகரிக்கப் பெற்று இரவும் பகலும் அதுவே சிந்தையாயிருந்து வந்தார். இந்த மநோரதத்துடனே சிலநாள் சென்றவாறே திருமலையப்பனிடத்தில் நியமனம் பெற்றுக்கொண்டு, மணவாள மாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயித்து உய்வதாக அங்கு நின்றும் புறப்பட்டு மார்க்க க்ரமத்திலே பெருமாள் கோயிலிலே வந்து சேர்ந்து பேரருளாளனைத் திருவடி தொழுது ஒன்றிரண்டு நாள் அங்கே தங்கிக் களித்திருந்தார்.

ஏற்கெனவே மாமுனிகளின் திருமுகத்துடன் புறப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் பயணகதியிலே பெருமாள் கோயிலைச் சென்று சேர்ந்தார்கள். யாத்ருச்சிகமாக அண்ணன் அவ்விடத்

வர்த்தித்து ஸகல திவ்யப்ரபந்த ரஹஸ்ய வ்யாக்யானங்களையும் அதிகரித்துக்கொண்டு க்ருதார்த்தராயிருந்தார்.

## மாமுனிகளின் திவ்ய தேசயாத்திரை.

ஆழ்வார் திருநகரி முதலான திவ்ய தேசங்களேற வெழுந்தருளி மங்களாசாஸனம் செய்து வரவேணுமென்று அபிநிவேசங்கொண்ட மணவாள மாமுனிகள் நம்பெருமாள் திருவடிகளிலே அநுமதி பெற்றுப் புறப்பட்டுப் பயணகதியிலே ஆழ்வார் திருநகரியிற் சென்று சேர்ந்து அங்கே சிலகாலம் எழுந்தருளியிருந்து அடிபணிந்தார்க்கு அரும் பெரும் பொருள்களை அருளிச்செய்து கொண்டு வாழ்ந்திருக்கையிலே, ஆசார்யஹ்ருதயத்தில் "ஜ்ஞான சதுர்த்திகளிலேயிறே ஆக்க வஸ்துக்களுக்கு உதயம்" என்கிற சூர்ணைக்கு ஸ்வாரஸ்யமான பொருள் தெளியப் பெறவேணுமென்று ஆசை யுண்டாக, திருநாராயணபுரத்திலே 'ஜகந்நாசார்யர்' என்று ப்ரஸித்தரான ஆய் என்னும் ஸ்வாசார்யர்களிலே கேட்டால் நன்கு தெளியலாம் என்று சில பெரியார் சொல்லக்கேட்டு அவ்விடத்தேற வெழுந்தருள்வதாக மநோரதித்திருந்தார்.

## திருநாராயணபுரத்து ஆய்பக்கலிலே அர்த்தம் கேட்டது.

அவ்வளவிலே அந்த ஜகந்நாசார்யர் மாமுனிகளின் ப்ரபாவ விசேஷங்களைப் பார்க்கப் பெற்றிருந்தவராகையாலே கோயிலிலே சென்று மாமுனிகளை ஸேவித்து வருவோமென்று புறப்பட்டு ஆழ்வார் திருநகரியிலே மாமுனிகள் எழுந்தருளியிருக்கிறாரென்பதறிந்து அங்கேற எழுந்தருள, அப்போதே இவரை ஸேவிப்பதற்காக மாமுனிகளும் திருநாராயணபுரம் நோக்கிப் புறப்பட்டு ஸ்வல்பதூரம் எழுந்தருளியிருக்க, இடையிலே இருவர்க்கும் யாத்ருச்சிக ஸங்கதியுண்டாக, மாமுனிகளும் ஆய்பக்கலிலே தம்முடைய மநோரதத்தை விண்ணப்பஞ் செய்து ஆசார்ய ஹ்ருதயத்தின் அர்த்த விசேஷங்களைக் கேட்டு உவந்தார். அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான வைலக்ஷண்ய விசேஷத்தைக் கண்டு விஸ்மயஸ்திமிதரான ஜகந்நாசார்யர்

"பூதூரில் வந்துதித்த புண்ணியனோ? : பூங்கமழும்
தாதாரும் மகிழ்மார்பன் தானிவனோ ?—தூதாய
வந்தநெடுமாலோ மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார் ?"

என்கிற வெண்பாவையருளிச்செய்து மாமுனிகளை விலக்ஷணவ்யக்தி விசேஷமாக எங்கும் ப்ரஸித்தப் படுத்திப்போந்தார்.

## மாமுனிகளின் மடத்தில் தீக்கொளுவுதலும் மாமுனிகளின் ப்ரபாவ ப்ரகாசமும்.

மாமுனிகள் இங்ஙனம் திருக்குருகூரில் அகமகிழும் தொண்டர்வாழ அற்புதமாக ப்ரவசநம் செய்து போராநின்று கொண்டு அபரிமித சிஷ்யஸம்ருத்தியுடனே வாழ்ந்தருளுங்காலத்தில் இப்பெருமையைச் சிறிதும் பொறுக்கவில்லாத ஆசார்ய புருஷர்கள் சிலர் ஆஸுரமான துராலோசனையைச் செய்து மாமுனிகளெழுந்தருளி யிருக்கிற ஓலைமச்சான மடத்திலே நடுநிசியில் தீக்கொளுவினார்கள். அப்போது மாமுனிகள் தம்முடைய ப்ரபாவத்தாலே அவ்வழல் தட்டாதபடி திருவனந்தாழ்வான் வடிவெடுத்து வெளியேறி மடம் வேகிறபடியைக் கண்டு சேவித்திருக்கும் முதலிகள் திரளிலே வந்து புகுந்து நிற்க அந்த அற்புத சர்யையை முதலிகளெல்லாரும் அறிந்து வியந்து உகந்திருந்தார்கள்.

இங்ஙனே சில த்ரோஹிகள் மடத்திலே தீக்கொளுவினார்களென்கிற செய்தியை அரசன் கேள்விப்பட்டு விசாரணை செய்து அவர்களையெல்லாம் தண்டிக்க நினைத்திருக்கிற வள

அங்கே நித்யகர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக் கொண்டு பெருமாளுக்குத் திருவாராதனம் கண்டருளப் பண்ணப் புகுந்து தம் திருவாராதனமான சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதியிலே தெண்டன் ஸமர்ப்பித்து "கௌஸல்யாஸுப்ரஜா ராம!" என்று அநுஸந்தித்துக் கொண்டே கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்கப் புகத் திருக்காப்பு திறக்கப் பெறவில்லை; பின்பு பலவாறு உபாயங்கள் செய்து பார்த்தும் ஒருபடியாலும் திறக்கப்போகாமையாலே பரம் துக்க பர்யாகுலராய் அமுது செய்யாமலே 'இது என்ன அபசாரமோ!' என்று மனம் வருந்து மூசித்துக்கிடந்தார். அன்றிரவில் அவருடைய கனவில் சக்ரவர்த்தி திருமகன் சேவைதந்தருளி "நமக்கு ஆருயிராய் உலகுக்கு ஒருநிரான மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயியாதே மீண்டுவந்தீராகையாலே உமக்கு நாம் கதவு திறந்திலோம்; திருவனந்தாழ்வானன்றோ அவராக வந்து அவதரித்தமை அறியீராக: அவர் திருவடிகளில் சென்று ஆச்ரயித்துத் தூய்மை பெற்றுவந்தாலன்றி உமது கையில் நாம் திருவாராதனம் கொள்ளக்கடவோமல்லோம்; சடக்கெனப் போமீர்" என்று நியமித்தருள, அப்பாவும் துயிலெழுந்து விஸ்மிதராய் இவ்வதிசயத்தை அன்பர்களுக்கு அறிவித்து அப்போதே புறப்பட்டுப் பயணகதியிலே நம்பெருமாள் ஸன்னிதி சென்று சேர்ந்தார்.

அப்போது மணவாளமாமுனிகள், ஸன்னிதியில் மங்களாசாஸனம் செய்தருளப் புறப்படும் அவஸரமாயிருந்தது. அப்பாவும் அவ்விடத்திலே மாமுனிகளைத் திருவடிதொழுது அவருடைய விசேஷகடாக்ஷத்திற்குப் பாத்ரபூதராகி, க்ரமேண தம்முடைய இல்லத்தில் நடந்த செய்திகளை யெல்லாம் விண்ணப்பஞ்செய்து, வேரற்றமரம்போலே திருவடிகளிலே விழுந்து அபராத க்ஷாமணம் செய்து கொண்டு 'இனி அடியேனுக்கு இத்திருவடி கிழலொழியப் புகலிடம் வேறொன்றில்லை; நெறிகாட்டி நீக்கப் பாராதே அத்தாணிச் சேவகத்திற்கு ஆட்படுத்திக் கொண்டருளவேணும்' என்று மிகவும் ப்ரார்த்தித்து மாமுனிகளின் நிரவக்ரஹமான அநுக்ரஹத்தைப்பெற்றுத் திருவிலச்சினையும்பெற்று, அன்று தொடங்கி ஸகலார்த்தங்களும் கேஷிக்கப்பெற்றுக் கிருதார்த்தரானார்.

இவர் பரமபக்தி பரீவாஹரூபமாக மணவாளமாமுனிகள் விஷயமான காவ்யநாடக சம்பூ ஸ்தோத்ரங்கள் முதலியன பலவும் பணித்தார். நாளடைவில் இங்ஙனே பலபல மஹான்கள் அடிபணிந்து அதியாதர வதிக்கப் பெற்று க்ருதார்த்தராய் உஜ்ஜீவித்துப் போருவார்களாயிருந்தனர்.

## அரங்கேசன் திருமுன்பே ஈடு அருளிச்செய்தல்

மணவாளமாமுனிகள் இங்ஙனம் அப்ரதிமவைபவம் பொலிய சிஷ்ய ஸம்பத்துடனே வாழ்ந்தருளுங் காலத்திலே ஒருநாள் ஸ்ரீ ரங்கநாதன் மாமுனிகளுக்கு அருளப்பாடிட்டு 'ஜீயரே! நாளை முதலாக நம்முடைய பெரிய திருமண்டபத்திலே நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறாயிரம் முதலான வியாக்யானங்களுடனே ப்ரவசனம் செய்து போரீர்' என்று நியமனம் ஸாதிக்க, மாமுனிகள் மஹாப்ரஸாதமென்று உகந்து அப்படியே மறுநாள் தொடங்கி, 'கங்காப்ரவாஹமோ? அல்லது கங்கையிற் புனிதமாய காவிரிப்பெருக்கோ?' என்னலாம்படியாக மிக அற்புதமாய்த் தம்முடைய விசதவாக்சிகாமணித் வத்தை நன்கு விளக்கிக்கொண்டு ப்ரவசனம் செய்தருளத் தொடங்கினர்.

அப்போது பெருமாளும் நாச்சிமாருடனே கூட திவ்ய ஸிம்ஹாஸனத்திலமர்ந்து, அச்சேர்த்தியை அநுபவிக்கிற அயர்வறுமமரர்களான திருவனந்தாழ்வான், பெரிய திருவடி, ஸ்ரீ ஸேனைமுதலியார் முதலான நித்யஸூரிகளோடும், மதுரகவிகள் முனிவரான நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்கள் பதின்மரோடும் ஆசிரியர்கள் திருமுற்றத்தடியாரோடுங் கூட

பேரோலக்கமாக இருந்து "ஸ்ரீரங்கே வத்ஸரமேகமேவம் அச்ருணோத்" என்னும்படியே ஒரு ஸம்வத்ஸரமளவும் திருச்செவி சாற்றும்படியாயிற்று.

இங்ஙனம் ஒரு ஸம்வத்ஸரகாலம் இடையூறொன்றுமின்றி இனிதாக நடைபெற்றுவந்த காலக்ஷேபம் தலைக்கட்டியருளும் நாளொன்று நேர்ந்தது. அன்று அழகியமணவாளன் திருவுள்ளத்திலே ஒரு தோற்றம் பிறந்தது. அதாவது—'நாம் விபவாவதாரங்களிலே சில பெரியோர்களிடத்தில் பணிந்திருக்கப்பெற்றும் அங்கே ஆசார்ய குணபூர்த்தியில்லாமையாலே நெஞ்சு குறையுற்றுத் ததும்பியேகிடக்க நேர்ந்தது; அக்குறையெல்லாம் தீர இப்போது இந்த ஸதாசார்யப்பேறு நமக்கு வாய்த்தது மறக்கொணா விசேஷமே. இங்ஙனம் நமக்கு நேர்ந்த மஹாபாக்யம் நீடூழிகாலம் இந்நிலவுலகத்தில் நிலவும்படி இந்த ஸதாசார்ய விஷயத்திலே ஒரு நிஷ்கர்ஷம் செய்யப்பெற்றதுமாக வேணும்; இந்த ஆசார்ய சிகாமணிக்கு ஒரு சிறந்த தனியனிட்டு அதைத் திருவோலக்கத்திலே விண்ணப்பஞ்செய்து அதுதனக்கு உலகம் நிறைந்த புகழுண்டாம்படி செய்வோம்' என்கிற திருவுள்ளம் உண்டாயிற்று.

ஸந்துஷ்ட: *பத்யம் அங்குளிவிச்சேத: *இத்யாதி ப்ரமாண கதியின்படி தனியன் அநுஸந்திக்கை சிஷ்ய க்ருத்யங்களில் தலையானதாகையாலும், ஸ்ரீரங்கநாதன் மாமுனிகள் பாட்டே தான் வழித்த சிஷ்யபாவத்தை நிறைவேற்றச் செய்ய விரும்பினபடியாலும் இங்ஙனே திருவுள்ளம் தோன்றியது என்று கொள்ளலாம்.

ஸ்ரீசைலேசத் தனியன் திருவவதரித்தல்.

அவ்வமயம் காலக்ஷேப கோஷ்டியில் "[illegible]" என்னுமளவாக [illegible] நடைபெறுத்த வேண்டிய அவஸரம் ப்ராப்தமாகையில்

அழகிய மணவாளன் நாலைந்து பிராயம் வாய்ந்த அர்ச்சக
குமாரனை கோலம் பூண்டு கனவேகமாகக் கோஷ்டி
நடுவிலே வந்து, அவரவர்கள் விலக்கினவற்றையும் லக்ஷியம்
பண்ணாமே புகுந்து கைகூப்பி நின்று

*ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம், யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்* என்கிற தனியனை விண்ணப்பஞ்செய்து மறைய இவ்வதிசயத்தை நோக்கி அனைவரும் வியந்தனர்.

இங்ஙனம் தெய்வவாக்காகத் திருவவதரித்ததாய்ச் சிறந்த மந்திரமென்று போற்றப்படுமதான இத்தனியனை பகவதாஜ்ஞையின்படி சிஷ்யவர்க்கங்கள் பட்டோலை கொண்டு மஞ்சட்காப்பு சாற்றி *அரவணைத்துயிலும் கடல் நிறக்கடவுளெந்தையின் திருவடி வாரத்திலே ஸமர்ப்பித்தெடுத்துத் தட்டிலே வைத்துச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். வேதத்திற்கு ப்ரணவம்போலே த்ராவிடவேதாநுஸந்தானத்திற்கு இத்திருமந்திரமே முதலும் முடிவுமாகக் கடவதென்னும் பெருமாளுடைய நியமனமும் பாங்காக வாய்ந்தது.

பின்பு சிஷ்யர்களால் *வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழும்* என்று தொடங்கி வாழித்திருநாமம் அரங்கநாத னாணையின்படி பணிக்கப்பட்டு, அதனை யநுஸந்தித்தே எங்கும் அருளிச்செயல் ஸேவை தலைக்கட்டுக வென்று நியமனமும் அவதரித்ததாயிற்று.

பிறகு மாமுனிகளை அழகிய மணவாளன் அருகிலழைத்து அநவதிகமான சிறப்புகளைத் தந்தருளி, கோயிலினின்றுக் கொத்தும் ஸகல வரிசைகளுடனும் திருவீதிவலமாக (மாமுனிகளை)

மடத்திலே எழுந்தருளப் பண்ணுவித்து "க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிற கணக்கிலே உள்ளம் பூரித்துக் க்ருதார்த்தனாய் விளங்கினன்.

## மாமுனிகள் திவ்யஸூக்திகளருளிச் செய்தல்.

ஏற்கெனவே அவதரித்திருந்த பூர்வாசார்ய திவ்யஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள் வதிலேயே மிகுந்த அபிநிவேசமுடையரான மாமுனிகள் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ளமுடையராயில்லாவிடினும், இவ்வுலகின் பாக்யபரிபாக மடியாக சிஷ்யர்களின் ப்ரார்த்தனைக் கிணங்கியும் பகவந்நியமனத்தை முன்னிட்டும் "தேனே பாலே கன்னலே அமுதே யான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச் செய்தருளும்படியாயிற்று.

அவற்றின் விவரணம் வருமாறு:—பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீ வசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யக்ரந்தங்கள் மிகச் சிறந்தவைகளும் ப்ரதானங்களுமானவையாதலே அம்மூன்றுக்கும் வியாக்யான மிட்டருளினர்.

பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்யான மிட்டருளினர்.

பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்யானமருளிச் செய் திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி புறத்பாசுரம் தொடங்கி "வாக்குத் தூய்மையிலா மையினாலே மாதவாவுன்னை" (5—1—1) என்கிற வரையும் வியாக்யானம் கரையானுக்கு இரையாகி லுப்தமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம் வியாக்யான மிட்டருளினர். அந்த வியாக்யானத்தை மஹான்கள் ஸேவித்து "அந்தோ! நாலாயிர வியாக்யானமும் கரையானுக்கு இரையாகியிருந்தால் நலமாயிருக்குமே; இங்ஙனே தேனும் பாலுமமுதுமன்ன வியாக்யானத்தை மாமுனிகள் பூர்த்தியாக இட்டருளும்படியான பாக்யம் நேர்ந்திருக்குமே' என்று பரஸ்பரம் வியந்து உவந்து பேசிக்கொண்டார்கள்.

இராமாநுச நூற்றந்தாதிக்கும், அருளாளப் பெருமாளெம்பெருமானாருளிச் செய்த ஞானஸாரப் பிரமேயஸாரங்களுக்கும் வியாக்யானம் செய்தருளினர். கீதைக்குத் § தாத்பர்ய தீபமென்றொரு வியாக்யானம் இட்டருளினர். ஈடு முப்பத்தாறாயிரப்படிக்கும் தாமருளிச் செய்த ரஹஸ்ய வ்யாக்யானங்களுக்கும் ப்ரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித் தருளினர். திருவாராதந ப்ரயோகமொன்று திருவாய் மலர்ந்தருளினர். உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி எனமூன்று தமிழ்ப் பிரபந்தங்களருளிச் செய்தார். [தேவராஜமங்களமும் யதிராஜ விம்சதியு மருளிச்செய்தமை கீழே நிரூபிக்கப்பட்டது.] மற்றும் ஸ்ரீஸூக்தி விசேஷங்களுண்டாகில் கண்டு கொள்வது.

---

§ யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் "கீதைக்குத் தாத்பர்ய தீப மென்றொரு வியாக்யான மிட்டருளி" என்றுள்ளது. சில ஆண்டுகட்கு முன் காஞ்சி ஸுதர்சன அச்சுக்கூடத்தில் தேவநாகர லிபியில் மாமுனிகளருளிச் செய்ததாக ஒரு வியாக்யானம் அச்சிடப் பட்டிருக்கிறது. இந்த வியாக்யானம் மாமுனிகளருளிச் செய்ததுதானென்று அதில் விரிவான பூமிகையும் (அண்ணங்கராசார்ய பாதர்கள்) வெளியிடப்பட்டிரா நின்றது. இருந்தாலும், அதைப்பற்றி ஆராய்ச்சி செய்த காலத்தில் அது மாமுனிகளருளிச் செய்ததன்றென்றும் மாமுனிகளுக்குப் பிற்பட்டவரான அபிராமவராசார்ய ரென்கிறவொருவரால் பணிக்கப்பட்டதென்றும் தேறிற்று. அதீந்த்ரியமான விஷயத்தில் ஒதியேனும் அடியேன் நிர்ணயித்துக் கூற அநதிகாரி. மாமுனிகளருளிச் செய்த கீதாதாத்பர்யதீபம் இப்போது கிடைக்கவில்லையென்றே அடியேனுடைய கொள்கை.

## மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திப்பெருமை.

உலகில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு. எனிலும், மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்த புஷ்டியும் சப்தபுஷ்டியும் அதீவ அஸாதாரணமாகவேயிருக்கும். "நாமூலம் லிக்யதே கிஞ்சித் நாநபேக்ஷித முச்யதே" என்னும்படி யமைந்த வியாக்யானம் மாமுனிகளுடையதேயாம். வேறு எந்த ஆசிரியரும் இங்ஙனே வியாக்யானம் அமைக்கக் கற்றிலர் என்றால் இது அதிசயோக்தியேயாகாது. பல மதாந்தரங்களைக் கண்டித்து எழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும், வ்யர்த்ததூஷண பரிஹாஸங்களைச் சிறிதும் புகவிடாதபடிக்கும், எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள் கனியாம்படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும், அஸங்கதம் க்லிஷ்டார்த்தம், மயங்கவைத்தல் முதலிய தோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாத படிக்கும் ஸ்ரீ ஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே. ஸூத்ரம் போன்ற பிள்ளை லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும் பதத்திற்கு அர்த்த மருளிச்செய்கிற வைகரியும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிர்மித்தருளுகிற அற்புதமும் *உள்ளுந்தோறு மென்னெஞ்சு எரிவாய் மெழுகொக்கும்.

வஸ்துத: இவ்வாசிரியருடைய ஸ்ரீ ஸூக்திகளை ஸேவித்த பின்பு இன்னொரு வாக்கில் வாசிக்க வைத்தால் *ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே" என்ற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்திக்கு விருத்தமாகச் சொல்லிலே சொல்கிற எண்ண முண்டாகிறதேயன்றி வேறில்லை. பல சொல்லி யென்? மற்றையோருடைய நூல்களைக் காணும்போது அவரவர்களுடைய ஞானத்தை அளவிட்டு அறியும்படியாகவுள்ளது; மணவாள மாமுனிகளின் வியாக்யானங்களை ஸேவிக்குமளவில், திருவடியைப்பற்றிப் பெருமாளருளிச்செய்த திருவாக்கே நினைவுக்கு வருகின்றது. *நாந்ருக் வேதவிநீதஸ்ய நாயஜுர் வேததாரிண: நாஸாம வேதவிதுஷ: சக்யமேவம் ப்ரபாஷிதும். நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம், பஹு வ்யாஹரதாநேந ந கிஞ்சித் அபசப்திதம்" இத்யாதி வாக்கினைக் காண்கும், "இல்லாத வுலகத்தெங்கு மீங்கிவனிசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னும் காட்சி, சொல்லாலே தோன்றிற்றன்றே யார் கொலிச் சொல்லின் செல்வன்? வில்லார்த்தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவலானோ? என்ற கம்பர் வாக்கும் உண்மையில் மாமுனிகள் விஷயத்திலேதான் பொருந்தக் காணலாமென்பது அநுபவிப்பவர்களின் அநுபவஸித்தமாகும்.

## அஷ்டதிக்கஜ சிஷ்யவர்க்கம்.

மாமுனிகளின் திருவடிகளிலே பல்லாயிரவர் ஆச்ரயித்து உய்ந்தார்களெனினும் ப்ரதாந பரிகணிதர்களான சிஷ்யர்கள் அஷ்டதிக்கஜங்களென்று ப்ரஸித்தர்.

வானமாமலைஜீயர்
பட்டர்பிரான்ஜீயர்
திருவேங்கடராமாநுஜஜீயர்
கோயிலண்ணன் :

பிரதிவாதிபயங்கர மண்ணன்
எறும்பியப்பா
அப்பிள்ளை
அப்பிள்ளார்.

என மூன்று ஜீயர்களும், ஐந்து க்ருஹஸ்தர்களும்.

## வைபவ நிகமநம்

எம்பெருமானார் வைபவம் போலே மாமுனிகளின் வைபவமும் மாகடல் போன்றதே; பக்தர்கள் அநுஸந்திக்க இவ்வளவே போதுமென்று ஸம்க்ஷேபித்தபடி. "அடியார்கள் வாழ

அரங்கநகர் வாழச் சடகோபன் தண்டமிழ் நூல் வாழக் கடல் சூழ்ந்த மன்னுலகம் வாழ மணவாளமாமுனியே! இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று அர்ச்சகர் தொடங்கிக் கூறுகின்றனவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதநிதலுள்ளளவும் மூச்சந்தியும் மூவரும் வாழ்த்தியே நிற்கும்படியான வாய்ப்பு ஜீயர் திருக்கையினால் இவ்வாசிரியரின் பரமபத யாத்ராவ்ருத்தாந்தம் முதலியவற்றை எழுதாது நிறுத்திக் கொண்டோமுக்கு, இவ்விபூதியிலேயே மாமுனிகள் நித்ய ஸ்ரீர்நித்ய மங்களமாக ஸேவை ஸாதிப்பதான அத்யவஸாயம் இன்னமும் பெற்றுள்ளது.

நம்மாழ்வார் தம்முடைய பெருமையை "துவளில் மாமணிமாடம்" "உண்ணுஞ் சோறு பருகுநீர்" முதலான திருவாய்மொழிகளில் தாமே வெளியிட்டுக் கொண்டாற்போல, மாமுனிகளும் ஆர்த்திப்ரபந்தத்தில் ஒரு பாசுரத்தினால் தமது பெருமைகளைத் தாமே அருளிச்செய்யும்படியாயிற்று நம்போல்வார் அநுதினம் அநுஸந்தித்து உய்ந்திடற்காக. ஆநந்தப்பரவசமே பக்தர்களுக்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது: அதாவது:—

"தென்னரங்கர் சீருளுக்கிலக்காகப் பெற்றோம்
தேவனுறை திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர்மாறன் கலையுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில்நெஞ்சு போகாமல் பெற்றோம்
பிறர் மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே"

என்பதாம்.

மணவாளமாமுனிகளின் முக்கியமான வைபவங்களெல்லாம் இப்பாசுரத்தில் அடங்கியுள்ளனவென்று கண்டு கொள்வது............................................"

ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாள மாமுனிகள் வைபவம் முற்றிற்று.

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

தொகுத்தெழுதிய

**பூர்வா சார்ய வைபவம்**

முற்றுப் பெற்றது.